P. T -


# ஸ்ரீராமாநுஜன் 218, 219







சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 19 | பராபவஹு மாசி பங்குனிக்காக 15—1—1967ல் வெளியிடப்பட்டது | ஸஞ்சிகை 2, 3 |
|---|---|---|


## திருவாய்மொழி நூற்றந்தாதி—பா. 94

**சார்வாகவேயடியில் தானுரைத்த பத்திதான்***
**சீரார் பலத்துடனே சேர்ந்ததனை—* சோராமல்**
**கண்டுரைத்த மாறன் கழலிணையே நாடோறும்***
**கண்டுகக்குமென்னுடையகண்.**

| | | | |
|---|---|---|---|
| அடியில் | ஆரம்பத்தில் வீடுமின் முற்றத்திலே | சோராமல் உரைத்த | ஒன்றும் குறையாமல் அருளிச் செய்த |
| சார்வு ஆகவே | எல்லார்க்கும் உபாதேயமாகவே | மாறன் | ஆழ்வாருடைய |
| தான் உரைத்த பத்திதான் | தாமருளிச் செய்த பக்தியானது | கழல் இணையே | உபய பாதங்களையே |
| சீர் ஆர் பலத்துடனே சேர்ந்ததனை கண்டு | சிறந்த பலனோடே சேர்ந்தபடியை யறிந்து | நாள்தோறும் | எப்போதும் |
| | | என்னுடையகண் | எனது கண்கள் |
| | | கண்டு உகக்கும் | ஸேவித்துக் களிக்கும். |

* * *—திருவாய்மொழி யென்பது ஒரு சிறந்த சாஸ்த்ரம். உபக்ரமித்த அர்த்தத்தை உபஸம்ஹாரம் பண்ணுவதென்பது சாஸ்த்ரார்த்தமாகையாலே முதலில் உபக்ரமித்த பக்தியோகத்தை * சார்வே தவநெறிக் கென்கிற திருவாய் மொழியிலே உபஸம்ஹரித்தருளினாரென்கிறது. “பிணக்கறவைச் சார்வாக நிகமித்து” என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியும் காண்க. ... .... .... 94

* வீடுமின் முற்றத்தில் உபதேசிக்க உபக்ரமித்த பக்தியும் இப்போது உபஸம்ஹரிக்கும் பக்தியும் ஸாத்ய பக்தியா? ஸாதநபக்தியா! என்றொரு விசாரமுண்டு ஸாத்யபக்தி யென்பர் சிலர். அது, மணவாளமாமுனிகளின் ஆசார்ய ஹ்ருதய வியாக்கியான ஸ்ரீஸூக்தி விருத்த மென்பதை ஸ்ரீராமாநுஜன் 211-ல் “ஸாத்ய பக்திஸாதநபக்திசோதன”மென்னும்வியாஸத்தில்விரித்துரைத்தோம்,கண்டுகொள்க.

## ஸ்ரீராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்

MADRAS MEMBERS

1 V. S. Venugopalan Life Member G. T.
2 A N. Rangasami Iyengar ,,
3 M. R. Seshadri Iyengar ,,
4 R. Ramachandran Avl 4
5 S. R. Srinivasa Iyengar 5
6 T. C A. Anandalwar Advocate 6
7 Srimathi Saroja Ramanujam
8 R. Varadachari 17
9 A. திருமலை ஐயங்கார் B A L.T. 44

— வெளியூர்கள் —

10 R. V. Seshadri Iyengar குளித்தலை
11 K. நாராயணஸாமி ரெட்டியார் மாளிகைமேடு
12 வேதவியாஸ வேங்கட பட்டர் கோமடிபல்லி
13 P. S. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸத்ய மங்கலம்
14 V.K. ஸ்ரீநிவாஸய்யங்கார் மல்லேச்வரம்
15 ஜோ. ஸ்ரீநிவாஸய்யங்கார் கடயக்குடி
16 R. நாராயணையங்கார் சிரகிக்கோட்டை
17 பு. கொ. மாசி செட்டியார் குன்னத்தூர் புதூர்
18 வாழப்பட்டு ராமஸ்வாமி ஐயங்கார்
19 ஸ்ரீ தேவநாதய்யங்கார் சிஷ்டி வண்டியம்
20 T. N. மகரபூஷணமையங்கார் தென் திருப்பேரை
21 S. கிருஷ்ணராமாநுஜம் நடயனேரி
22 நவநீதகிருஷ்ண ராமாநுஜ ஸபை உடுமலைப்பேட்டை
23 R. S. சேஷாத்ரி ஏத்தக்குடி
24 கொண்டா J. கேசவராமன் பரமகுடி
25 பரவஸ்து திருவேங்கடாசாரியர் திருவாலி
26 உபய வேதாந்த ப்ரகடன ஸபை மதுரை
27 S. கிருஷ்ணையங்கார் திருநெல்வேலி
28 R. ஜகன்னாதய்யங்கார் பாண்டிச்சேரி
29 M. N. Chari Calcutta
30 ராஜமையங்கார் ஈரோடு

ஸ்ரீ:

ஆண்டாள் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.



# ஸத்காலக்ஷேப ஸபை விருந்து

பராபவ ஸ்ரீ மார்கழித் திங்களின் நினைவு மலராக

ஸ்ரீகாஞ்சீ. **P. B.** அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள்

வெளியிட்டது.

கிடைக்குமிடம் :

Sath Kalakshepa Sabha Office,

3, Thambu Naicken St, Madras-1.

விலை 2-00]

[அன்றிவ்வுலகமளந்தாய் 1967

# P. B. A. ஸ்வாமிகளின் நூல்களுக்குச் சுருக்கமான விளம்பரம்.

P. B. A. ஸ்வாமிகளால் இயற்றப்பட்டு அச்சிடப்பட்ட நூல்கள் பன்னிரண்டு துறைகளில் அமைந்தவை. அவற்றுக்கு விரிவான கியாடலாக் தருவித்துக் கொள்வது. இங்கு அப் பன்னிரண்டு துறைகளையும் விளக்கி ஒவ்வொரு துறையிலும் வெளிவந்துள்ள நூல்களைச் சுருக்கமாகக் காட்டுகிறோம்.

1. **பூர்வாசார்யர் பெருமை நூல்கள்:** ஆழ்வார்களின் வைபவங்களும் ஸகல ஆசாரியர்களின் வைபவங்களும்.

2. **இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்:** வான்மீகி ராமாயணம் பூர்த்தியாக வசனநடை. திவ்வியப்பிரபந்தங்களில் ஆழ்வார்கள் அநுசந்தித்த பகவத் கதைகள்.

3. **உபந்யாஸகர்களுக்கு உதவியான உபந்யாஸ நூல்கள்:** பன்னிரு திங்களநுபவம், மதுரோபந்யாஸமாலே, அத்புதோபந்யாஸமாலே, உபந்யாஸஸப்தகம், உபந்யாஸ சதத்வயம், திருப்பாவை ஜீயர் ஸத்காலக்ஷேப ஸபை விருந்து முதலான 23 நூல்கள்.

4. **வேதாந்த விளக்க நூல்கள்:** விசிஷ்டாத்வைததரிசனம், விசிஷ்டாத்வைத ஸாரம், விசிஷ்டாத்வைதஸர்வஸ்வம் பகவத்கீதை யறுபத்திரண்டு, ஸ்ரீ பாஷ்யஸாரம் முதலியன. இவை வடமொழியில் மிகமிக வுள்ளன.

5. **திவ்யப்பிரபந்த திவ்யார்த்ததீபிகை:** நாலாயிர திவ்வியப் பிரபந்தங்களுக்கும் பூர்த்தியாக விரிவுரைகள் 20 வால்யம். தெலுங்கிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் ஹிந்தியிலு முண்டு.

6. **ஆசார்யர்களின் தமிழ் நூல்களுக்கு உரை:** ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்தகாதை, உபதேசரத்தினமாலே. திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்தி....இவற்றுக்கு விரிவுரை, நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியுரை முதலியன.

7. **ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்:** முமுக்ஷுப்படிஸாரம், ஸ்ரீவசனபூஷண ஸாரம், தத்வத்ரயஸாரம், ஆசார்ய ஹ்ருதயஸாரம், ஆசார்யஹ்ருதயப்பதவுரை.

8. **ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ரங்களினுரை:** முகுந்தமாலே, ஸ்தோத்ரரத்னம், சதுச்ச்லோகி, கத்யத்ரயம், பஞ்சஸ்தவம், ஸ்ரீரங்கராஜஸ்தவம், ஸ்ரீகுணரத்னகோசம், ஸுதர்சநசதகம், யதிராஜவிம்சதி, நக்ஷத்ரமாலிகை, தேசிக ஸ்தோத்ரங்களில் 12. இவற்றுக்கு விரிவான உரை, சிறிய ஸ்தோத்ரங்களனைத்துக்கு முரை.

9. **வேத லக்ஷண விசார நூல்கள்:** வேதாத்யயந ஸர்வஸ்வம், பதபாட பரித்ராணம், பதபாடபரிசுத்தி வேதபாஷ்யவிமர்சனம் முதலான பத்து நூல்கள்.

10. **ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்:** ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதி, ஸத்ஸம்ப்ரதாயார்த்த ரக்ஷா, ஸர்வஜ்ஞஸூக்தி ஸர்வஸ்வம், வைசாகோத்ஸவோபந்யாஸமாலே, திருவல்லிக்கேணி யுபந்யாஸமாலே முதலிய 27 நூல்கள்.

11. **லோகாபிராம நூல்கள்:** நற்போது போக்கு. ஸ்ரீவைஷ்ணவமஹாநிதி, ஸ்ரீராமாநுஜபூஷணம், கம்பரின்பக்கவித்திரட்டு அஷ்டாத சாஷ்டாதச மஹார்த்த நிதி முதலான நூற்றுக்கணக்கானவை.

12. **பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்:** ஸதாசார்ய ஸூக்திரக்ஷா, அத்புத சக்தி; வரதன் ஸன்னிதி வரலாறு, ரத்ன பரீக்ஷா, ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன், வம்பவிழ் கோதை தத்துவம், ஜகதாசார்ய ஸூக்திஸுதாநிதி, சதபூஷணீவஜ்ரகுடாரம், சாங்கர சிரோபூஷா, விசிஷ்டாத்வைத விஜயத்வஜம் ஸ்ரீமஹாவிஷ்ணு ஸாம்ராஜ்யம், ஆழ்வார்களின் காலநிர்ணயம் ஸாத்யபக்தி ஸாதநபக்தி சோதனம் முதலான 86 நூல்கள்.

இப்பன்னிரண்டு துறைகள் தவிர, பதின்மூன்றாவது துறையுமுண்டு. அதில், பூர்வாசாரியர்களருளிச்செய்த காலக்ஷேப க்ரந்தங்கள் யாவும் தமிழ், தெலுங்கு, தேவநாகரி லிபிகளில் பரிஷ்கரித்து அச்சிடப்பட்டுள்ளன. ஸ்ரீமத் வரவரமுனீந்த்ர க்ரந்தமாலே தமிழ்லிபியில் ஸமீபத்தில் வெளிவந்தது.

## SRI KANCHI MAHA VIDWAN

# P. B. ANNANGARACHARYA SWAMI

It is now twelve years since the Sath Kalakshepa Sabha was started in the city of Madras to arrange for the discourses of our Swami during week-ends every month and throughout the month of Margazhi annually. Since then, the work of the Sabha has been going on until about 2 or 3 years ago when owing to the advancing age of the Swami the monthly discourses could not be continued. Nevertheless the Tiruppavai discourses had been held every year and this year marks the 36th year of the Swami's discourses on the subject in the city of Madras. It is well known that he had begun delivering these discourses since 1931 when some Bakthas had approached him at Kanchi to deliver religious discourses at Madras during week-ends to fill the void created by the untimely passing away of the late Maha Vidwan Tirukkannapuram Pattapa Swami of immortal fame.

These discourses began first under the auspices of the Bhagavath Katha Prasanga Sabha at the Tondaimandalam High School, Mint St, Madras, where they were continued for about 23 years until our Sabha was started. During these 35 years the Swami has been delivering Upanyasams on a variety of subjects and topics including Sri Ramayanam, Srimath Bhagavatham Githasaram, the Divyaprabhandams and several Rahasya Granthas to the delight and edification of thousands of people who had been hearing him.

Of his great ability, fitting tributes had been paid by such eminent personages and impartial critics such as Sir S. Varadachariar, fortunately still with us, and the late Sir C P. Ramaswami Iyer, the late Justice Pathanjali Sastriar, the late Maharishi Vasudevachariar, the late Maha Mahopadyaya U. V. Swaminatha Iyer the late Dr. K. S. Krishnan, F R S., the late Sri A. V. Gopalachariar and many others too numerous to mention I am only a humble votary at the shrine of our Swami.

The Swami has the rare capacity of keeping his audience spellbound by his discourses. Besides being a great Vedic scholar, his knowledge of our Shastras, Puranas, Kavyas and the Ubhaya Vedantas is profound Indeed his knowledge on such matters has been truly said to be encyclopaedic covering as it does a wide range of deep study. Naturally therefore he has a marvellous way of presenting his subject which keeps his audience enthralled. He has a capacious memory and reels out apt quotations from various texts which flow like the waves of the sea. He has also a lively sense of humour and his discourses, which begin promptly to the second at the appointed time, go on without a pause for hours together—so engrossed is he in the subject. As an expositor he

stands unrivalled and it is our peculiar good fortune to have him in our midst.

His services to the cause of Sri Vaishnavaism and the Ramanuja Siddhantha have been unparalleled for besides giving discourses here and elsewhere, he has published many books and periodicals in several languages which run into hundreds of volumes embodying the results of his wide studies and his deep researches on many ticklish and controversial topics with a view to spread correct knowledge on such matters among the Asthika public. Posterity is greatly beholden to him for his service in this direction for they are of permanent value.

Besides writing and speaking on religious topics he has been doing Nithya Seva with his Goshti at the Shrine of Sri Varadaraja Swami of Kanchipuram. He has also visited many other places of pilgrimage throughout the country with his devotees and Sishyas several times and has rendered yeoman services at the various Divyadeshas by delivering Upanyasams and performing other Kainkarayams. The establishment of the Sanskrit Patasala and the Nammpillai Sannidhi at Kanchipuram by him at great cost, with the aid of some devotees, are note worthy events and show his obvious sincerity and that he practices what he preaches and they are now understood to have been put on a permanent footing for their proper conduct in the future.

His recent illness would seem to have only spurred him on to greater activity in the field of writing and the articles he has been contributing to the columns of Sri Ramanujan and other journals with which he has been connected during recent years are of inestimable value. His great undertaking to publish in a collected form all the works of Sri Manavala MahaMuni is a monumental and praiseworthy undertaking, which has to be highly commended. All these manifold services he has been doing without any thought of the cost involved and as a labour of love.

In private life he is simple and unostentatious and absolutely devoid of pride or vanity. He is easy of approach and is a pleasant conversationalist and has the welfare of all at heart. Though uncompromising on principles he bears malice to none, not even to his enemies He is indeed a unique personality who has been rendering invaluable service in many ways in the religious field. May the Lord Varadaraja of Kanchi of whom he is a devout worshipper vouchsafe to him a long healthy and vigorous life so as to enable him to continue his ceaseless activities in his chosen fields for a long time to come.

**V. RAJAGOPALACHARI,**
7—1—1967.

ஸ்ரீரஸ்து.

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸத்காலக்ஷேப ஸபை விருந்து

அடியேன் சென்னையில் பிரவசனம் செய்யத் தொடங்கியது 1931-ஆம் ஆண்டில் ஜூன்மீ முடிவில்; அப்போது, பகவத்கதாப்ரஸங்கஸபையென்று சென்னை மாநகரில் நெடுநாள் முன்னமே ஸ்தாபிக்கப் பட்டிருந்த வொரு ஸபையின் மூலமாகவே அடியேனுடைய பிரவசனங்கள் சனி ஞாயிறு தோறும், மற்றும் ஸமய விசேஷங்களிலும், மார்கழி மாதங்களிலும் தொண்டமண்டலம் ஹைஸ்கூல் ஹாலில் நடைபெற்று வந்தன. இப்படி அந்த ஸபையின் மூலமாக நடந்து வந்தது இருபத்துமூன்ருண்டு; அதாவது 1954 ஜூலை வரையில். அந்த ஸபை ஒழுங்கான முறையில் நடைபெறுவதற்கு ஸௌகரியக் குறைவு ஏற்பட்டதனுல் இரண்டு மூன்று மாதங்கள் அடியேனுடைய பிரவசனம் சென்னை மாநகரில் நின்றிருந்தது. அந்த ஸமயத்தில், கீழ்ப்பாக்கில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே. V. ராஜகோபாலாசாரியர் (M. L. பிரபல அட்வகேட்) ஸ்வாமியைத் தலைவராகக் கொண்ட ஸபையொன்று 2—10—1954-ல் சில மஹநீயர்களால் ஸ்தாபிக்கப்பட்டது. அதன் பெயர் ஸத்காலக்ஷேபஸபையென்பதாம். இந்த ஸபையை ஸ்தாபித்து நடத்திவரும் மஹான்களைப் பற்றி மேலே தெரிவிப்பேன். பன்னிரண்டு வருஷங்களாக இந்த ஸபையின் மூலமாகவே இங்கு அடியேனுடைய பிரவசனங்கள் நடைபெற்று வருகின்றன. 21—2—1964-ல் அடியேனுக்கு அகஸ்மாத்தாக ஏற்பட்ட ஹ்ருதய கோச வ்யதையினுல், சனி ஞாயிறு தோறும் நியமேந நடந்துவந்த பிரவசனங்களை நிறுத்தவேண்டியதாயிற்று. அப்போது உண்டான அநாரோக்யம் குறையாமலும் அதிகப்படாமலும் இருந்து வருவதனுல் பிரவசனங்களை அடியோடு நிறுத்தாமலும் முன்போல் நடத்திவர முடியாமலும் ஒருவாறு ஸமய விசேஷங்களில் நடத்திவருகிறேன். மார்கழித்திங்களில் திருப்பாவைப் பிரவசனம்



மட்டும அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் இடையறுது அவிச்சின்

னமாக நடைபெற்று வருவது ஆண்டாள் திருவருளால். திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி யெம் பெருமான் ஸன்னிதியில் ஒரு வருஷமும், (T. Nagar) வாணீமஹாலில் இரண்டு வருஷமும் திருப்பாவைப்பிரவசனம்நடந்தபோதும்இந்த



ஸத்காலக்ஷேபஸபா மூலமானப்ரவசனத்திற்கு விச்சேதம் நேர்ந்ததே கிடையாது. இதற்குக்காரணம் இந்த ஸபையின் நிரந்தர அக்ராஸநாதிபதியான ஸ்ரீமத் V. ராஜகோபாலாசார்ய ஸ்வாமியின் சிறந்த திருவுள்ளப்பாங்குஒன்றேயாகும். அந்த ஸ்வாமி இப்புதிய ஸபை ஏற்பட்டபிறகு மட்டுமல்லாமல் முன்னமே பிடித்து அடியேனுடைய பிரவசனகோஷ்டியில்திலகமாக எழுந்தருளியிருந்தவரென்பதை ஆனந்த பூர்வகமாகவிஜ்ஞாபித்துக் கொள்ளுகிறேன் அவருடைய கருத்தையடியொற்றிநடந்து வரும் ஸ்ரீ, A. ஸ்ரீநிவாஸய்யங்கார். ஸ்வாமி. ஸ்ரீமான் கொஞ்சேடி. ஸுப்ராயுலு, செட்டியார். A.V கன்னைய நாயுடு, புலிபாடி. ஸோமஸுந்தரராவ் முதலான பரமப்ரேம நிதிகளின் ஒத்துழைப்பும் உயரிய காரணமாகும். இச்சபையின் தலைவரான ஸ்ரீவே. V. ராஜகோபாலாசாரிய ஸ்வாமியின் திருவுருவப் படத்தை பக்தர்கள் ஸேவிக்குமாறு இங்கே வெளியிடுகிறேன். ஸபாதிகாரிகள் மற்றையோருடையவும் உருவப் படங்கள் இதில் இடம்பெற்று விளங்கும். ஆரம்பத்தில் (சென்னையில்) அடியேனுடைய ப்ரவசனஸ்பதமாயிருந்த பகவத்கதாப்ரஸங்கஸபையின் மூலமாகப் பல பிரசுரங்களை வெளியிட்டிருக்கிறேனென்பதை பக்தர்கள் மறந்திருக்க மாட்டார்கள். அதேபோல இந்தஸத்காலக்ஷேபஸபையின் சார்பாகவும் சில வெளியீடுகளைப் பிரசுரம் செய்யவேணுமென்று ஆவல்கொண்டு முதன் முதலாக இப்புத்தகத்தை **ஸத்காலக்ஷேபஸபை விருந்து** என்னும் பெயரால் நிகழும் மார்கழித் திங்களில் * அன்றிவ்வுலகமளந்தாயடிபோற்றி * யென்னும் மங்களாசாஸனப்பாசுரத்தினன்று

வெளியிடுகிறேன். இதில் மார்கழி மாதவிசேஷங்கள்பல வெளிவர வேண்டுமென்கிற விருப்பத்தினுல் திருவத்யயனுேத்ஸவ வைபவதீபிகையென்னும் நூலே முதன் முதலாக வெழுதி வெளியிடுகின்றேன்.

இந்தத் திருவத்யயனுேத்ஸவம் அனேகமாக விஷ்ணுவாலயங்களிலெங்கும் நடைபெற்ருலும் திருவரங்கம் பெரிய கோயிலில் நடைபெறுவது தான் மிகவிசேஷமுடைத்து. அங்கு, விடைகொண்டு ஸேவிப்பவர்களுக்கு பகவத்ஸேவையிற் காட்டிலும் பாகவதஸேவையே சிறப்புறும். * தென்னுடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கந் திருப்பதி * யென்று பெரியாழ்வாரருளிச் செய்தபடி பல திசைகளிலிருந்தும் ஸேவிக்க வரும் ஸ்ரீவைஷ்ணவ ஸ்வாமிகளை ஸேவிக்கப் பெறுவது கண்கொள்ளாக்காட்சியாயிருக்குமன்றே? ஆகவே அந்த மஹோத்ஸவவைபவதீபிகையாக அமையுமிந்தப் புத்தகத்தை வாசிப்பவர்களுக்கு அனேக திவ்ய கோஷ்டிகளையும் அனேக மஹநீயர்களையும் ஸேவிக்கும் பாக்கியமும் கூடவே வாய்க்க வேணுமென்று ஆசை கொண்டு இதில் அதீத—வர்த்தமாந மஹாஸ்வாமிகள் சிலரின் திருவுருவப்படங்களையும் சில திவ்யதேச கோஷ்டிப் படங்களையும் காட்சியளிக்கச் செய்கிறேன். முந்துற முன்னம் மஹாஸ்வாமிகள் சிலர் ஸேவைஸாதிக்கக் காணீர். அடியேனுக்கு தேஹபாந்தவ்யத்தில் பூர்வாச்ரம மாதாமஹரும் ஞானக்கை தந்த மஹோபகாரகருமான [ஷஷ்டிஜீயரென்று ப்ரஸித்தரான]ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. காஞ்சீவாதிகேஸரி. அழகிய மணவாள ராமானுஜஜீயர் ஸ்வாமி இங்கே ஸேவைஸாதித்தருளாநின்ருர். ஸ்ரீஸ்வாமி திருவடிவாரத்தில் இருபத்தைந்து பிராயமளவும் வர்த்திக்கப் பெற்று லபித்த மஹாநிதிகளால் எனக்காரும் நிகரில்லையே! என்று களித்துப் பேசுபவனடியேன். இங்கு வெளியிடும் திருவத்யயனுேத்ஸவவைபவ தீபிகையில் பொறிக்கும் விஷயங்கள்



பெரும்பாலும் ஸ்ரீஸ்வாமி திருவருளால் பெற்றவையென்னுங்காரணத்தினுலும் ஸ்வாமியை இங்கேயெழுந்தருளப் பண்ணி வைத்தேன். ஜீயர் ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி ஐம்பது ஸம்வத்ஸரங்கள் நிரம்பின, ஆளவந்தார் *பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத* என்றருளிச் செய்தது போல் அடியேன் *மாதா

மஹம் ஸௌம்யவரம் முநீந்த்ரம் த்ருஷ்ட்வா ப்ரஸீத* என்றநுஸந்திப்பதுண்டு.

இதோஇவ்விடத்தில் ஸேவைஸாதித்தருளா நின்ற மஹாஸ்வாமி ஸ்ரீமத் திருமலை அனந்தாண் பிள்ளை, குன்றபாக்கம் சீமாச்சார் ஸ்வாமியென்று தென்னாடுகளிலும், சிங்களாசார்ய ஸ்வாமியென்று வடநாடுகளிலும் ப்ரஸித்தி பெற்றிருந்த வித்வத் ஸார்வபௌமர். அடியேனுடைய திருத்தகப்பனார் இந்தஸ்வாமி ஸன்னிதியிலேயே ஸாமாந்ய விசேஷவித்யாக்ரஹணம் பண்ணினவராகையாலே, குன்றபாக்கம் மஹாஸ்வாமி ஸாதித்தருளக் கேட்டதென்று அடிக்கடிபணிக்குமவற்றைப் பத்தாவது பிராயம் முதலாகவே நான்கேட்டிருந்தேன். பிறகு ஏறக்குறைய பத்து ஸம்வத்ஸரகாலம் ஸ்ரீஸ்வாமியின் விசேஷகடாக்ஷபாஜனமாயிருக்கப் பெற்றேன். * ஸித்தம் ஸத்ஸம் ப்ரதாயே.... டம்பாஸூயாவிமுக்தம் * என்னப்பட்ட ஆசார்யலக்ஷண புஷ்கலராயெழுந் தருளியிருந்த வித்வத் கண்டீரவமஹா ஸ்வாமியிவர். இந்த ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளி ஐம்பத்திரண்டு ஸம்வத்ஸரங்களாயின. அக்காலத்தில் அனந்தாண் பிள்ளை திருவம்சத்தில் சந்திரஸூரியர்களென்று மஹாஸிம்ஹ த்வயம் ஸுப்ரஸித்தமாயிருந்ததை உலகம் இன்னமும்



மறந்திராது. இங்கேஸேவைஸாதித்தருளும் குன்றபாக்கம் ஸ்வாமி சந்திரனாகவும், அடுத்தபடிஸேவைஸாதித் தருளும் புரிசை ஸ்வாமி ஸூர்யனாகவும் மதிக்கப் பட்டிருந்தார்கள். திருமலை திருப்பதி அனந்தாண் பிள்ளை, புரிசை. ஸ்ரீரங்காசார்யஸ்வாமியென்றுஸுப்ரஸித்தராய்க் கீழ்த் திருப்பதியிலெழுந்தருளியிருந்த அந்த மஹாஸ்வா

மியின் திருவுருவப் படத்தை இதோ இங்கு ஸேவிக்கிறீர்கள். * நர: பதிதகாயோபி யச: காயேந ஜீவதி * என்கிற முதுமொழி இந்த மஹா ஸ்வாமிக்கே ஏற்கும். சதுச்சாஸ்த்ர வித்வான்களில் தலைவராக விளங்கின இந்த மஹா ஸ்வாமி ஸன்னிதியில் ஸாமாந்ய சாஸ்த்ரங்கள் அதிகரித்து ப்ரக்க்யாதி பெற்றவர்கள் பலர். ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதி பயங்கரம். ஜகத்குரு - காதி. அனந்தாசார்ய ஸ்வாமி, (திருப்பதி.) கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமி, அஹோபில மடாஸ்தானத்தை அலங்கரித்திருந்த இஞ்சிமேட்டழகியசிங்கரென்று ப்ரஸித்தரான (பூர்வாச்ரம.) இஞ்சிமேடு, ரங்கநாதாசார் ஸ்வாமி-ஆக இம்மூவர் பரிகணநீயர்கள். மற்றும் பல ஸ்ரீ வைஷ்ணவர்களும் ஸ்மார்த்த மாத்வர்களும் கீர்த்தி சேஷர்களாகவேயுள்ளார்கள். இந்த மஹா ஸ்வாமியால் அருளிச்செய்யப்பட்ட ஸாமாந்யவிசேஷ சாஸ்த்ர வாதக்ரந்தங்கள் பலவுண்டு. இந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து நாற்பதாண்டுகட்கு மேலாயின. ... ... ... ... ... ...



ஸ்ரீமதுபய வே. திருமலை-அனந்தாண் பிள்ளை.
புரிசை-ஸ்ரீ ரங்காசாரிய ஸ்வாமி (வைகுண்டவாஸி.)

ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. சின்னராமாநுஜ ஜீயர் ஸ்வாமியென்னும் வர்த்தமான ஆஸ்தாநாதீச்வரரான ஸ்ரீ வானமாமலை ஸ்வாமி இங்கே ஸேவை ஸாதித்தருளுகிறார். ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் வித்வான் வானமாமலை ஐயங்காரென்றே ப்ரஸித்தி பெற்றிருந்தவர். கீழே நாலாவது பக்கத்தில் ஸேவை ஸாதித்தருளும் ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமி ஸன்னிதியில் சில வாண்டுகளிருந்து ந்யாய சாஸ்த்ர க்ரோடபத்ரங்களையதிகரித்து அக்காலத்திலேயே வித்வத் கோஷ்டியில் திலகமாக விளங்கின மஹான் இந்த ஸ்வாமி. நம் போல்வாருடைய பாக்ய பரிணாமத்தினால் இப்போதுபோல எப்போதும் பாங்காக எழுந்தருளியிருந்து நம் தர்சனத்தை வாழ்வித்தருள வேணுமென்று நாடடங்க ஆசாஸிக்க ப்ராப்தம். இப்போது விளங்கும் மடாதிபதிகளுள் ஞானத்தினாற்போல திரு நக்ஷத்ரத்தினாலும் வ்ருத்தராகவிளங்கும் ஸ்வாமியன்றோ இந்த ஸ்வாமி. நித்யஸ்ரீர் நித்யமங்களம். ... ... ... ... ..



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. வர்த்தமான—வானமாமலை ஸ்வாமி.



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. (வர்த்தமான) திருக்குறுங்குடி ஜீயர் ஸ்வாமி.



ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி (வர்த்தமாந) பெரிய ஜீயர் ஸ்வாமி இங்கே ஸேவை ஸாதித்தருளு கிருர். ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் ஸ்ரீமதுபயவே. ஸாது. ராமாநுஜாசார்ய ஸ்வாமி யென்று ப்ரஸித்தி பெற்றிருந்த வித்வத்வரேண்யர். ஸ்ரீ ஸ்வாமியின் வைபவக்கடலில் சில சிறு திவலைகளை ஸ்ரீ ராமாநுஜன் நெ 215 ல் அநுபவித்திருக்கிறேன. திருவாய்மொழியில் ஒழிவில்காலப் பதிகத்திற்கு * வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம் புகழவே * என்றிட்ட பல ச்ருதி ஸ்ரீ ஸ்வாமிக்குப் பலிக்கவேணு மென்று உலகமெல்லாம் ஆசாஸிக்கின்றது. ... ...



ஸ்ரீமதுபய வே. அப்பன் ப்ரணதார்த்திஹ ராசார்ய ஸ்வாமி. (வைகுண்டவாஸி.)

இந்த மஹாஸ்வாமியின் பிரபாவத்தை ஸ்ரீ ராமாநுஜன் 212-ல் வெளியிட்டிருக்கிறேன்.

# விஜ்ஞாபனம்.

அன்பர்களே! ஸத்கால க்ஷேப ஸபை விருந்து என்னும் பெயர்பூண்ட விருந்து நூலை அடிக்கடி வெளியிட விருப்பமுள்ளது. மூன்று மாதங்களுக்கொரு முறையாவது வெளிவந்துலவும். ஸமயோசிதங்களான விசேஷங்களைத் தாங்கி வெளிவரும். ஒவ்வொன்றிலும் இத்தகைய பெரியோர்களின் ஸேவை கிடைக்கும். ... ... ...

முன்னுரை முற்றிற்று.



ஸ்ரீமான் உ. வே. A. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி

A. S. Vasan & Sons, Muthyalpet Madras G. T.



Sriman C. Subbarayalu Chetty, Thambunaicken St., Madras G. T.

1. இங்கே விளங்குகின்ற ஸ்ரீமத். ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகள் நமது ஸத்காலக்ஷேப ஸபைக்கு உப தலைவர். ஸபைத் தலைவரான ஸ்ரீமத். V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமிபோலவே இந்த ஸ்வாமியும் அபரிமிதமான அன்பும் ஆதரவும் கொண்டவர். ஸபையினுடைய அபிவிருத்தியையே இரவும் பகலும் சிந்திப்பவர்.

2. அடுத்தபடியாக நிற்பவர் ஸ்ரீமான் கொஞ்சேட்டி ஸுப்ராயலு செட்டியார் நமது ஸபையின் தலைமைக் காரியதரிசி. ஸபையின் ஸகல பொறுப்புகளும் இவருடையது.



Sriman
A. V. Kannayya Naidu, G. T.

ஸ்ரீமான் கன்னைய நாயுடு என்கிறவிவர் நமது ஸபையின் ஜாயிண்டு ஸெக்ரிடெரி. பரம பக்த மணியென்று பெயரிடப் பெற்றவர். மற்றும் சில தரும நிர்வா ஹங்களையும் கவனித்து வருபவர். வாழ்க.



Sriman
Cheethalla Chinnikrishna Chetty

சீதள்ள சின்னி கிருஷ்ண செட்டி இளம் பிராயமானாலும் பகவத் பாகவத ஆசார்ய பக்தியில் பெருமை பெற்றவன்.



Sri P. V. Pandurangam Chetty

ஸ்ரீமான் பாண்டுரங்கம் செட்டி யென்கிற இந்த பக்த ரத்னம் உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் சாரிடிக்கு மானேஜர். காலஞ் சென்ற மந்தாரம் மணவாள செட்டியார் போலவே இவரும் காலக்ஷேப ச்ரத்தாளு





ஸத்காலக்ஷேப ஸபையின் உபந்யாஸகோஷ்டியின் ஒருபகுதி
3—1—1967

## சென்னை வைணவ மகாநாட்டு நிகழ்ச்சி

உலகப் பிரசித்தரான ஸ்ரீமான் K. வெங்கடசாமி நாயுடுகாரு, B A., B L., (மாஜி மந்திரி) அவர்களின் முயற்சியினல் நாற்பதாண்டுகட்கு முன் தொடங்கப்பட்டு வருடந் தவருமல் நடந்து வருகின்ற வைணவ மகாநாட்டின் நாற்பத்தோராவதாண்டு நிறைவு விழா நிகழும் மார்கழி மாதத்தில் மூன்று நாட்கள் சிறப்பாக நடைபெற்றது. 1966 டிசம்பர் 24, 25, 26 தேதிகளில் ஆண்கள் மகாநாடும், அடுத்தவொருநாள் பெண்கள் மகாநாடும் நடந்தேறியது. ஆலந்தூரில் வாழும் வைணவமணி ஸ்ரீமான் சக்ரபாணி ரெட்டியாரவர்கள் ஆண்கள் மகா நாட்டுக்குத் தலைமை தாங்கிஞர்கள். இப் பெரியார் உத்தம வைணவ குடும்பத்தில் தோன்றிய மிகச் சிறந்த ஆஸ்திகமணியென்பதை நாம் இப்பொழுது தான் அறியப்பெற்றேம்.



இந்த மகாநாட்டை ஆழ்வார் திருநகரி. ஸ்ரீமதுபயவே. வித்வான். நல்லான் ராமகிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி திறந்து வைத்தார். மூன்று நாளும் பல வைணவ பாகவதர்கள் ஸம்பிரதாய விஷயங்களைப் பற்றிச் சொற்பொழிவாற்றினர்கள். உயர் திருவாளர் (சென்னை) N. வேணுகோபால நாய்க்கர் B A., B.L., அவர்கள் ஆதிமுதல் இந்த மகாநாட்டுக்குச் சிறந்த அபிமானியாதலால் அவருடைய ஒத்துழைப்பினல் மகாநாடு மிகவும் புரிமளித்தது. நம்முடைய உபந்யாஸ ஸ்தலமான உப்பட்டூர் ஆழ்வார் செட்டியார் ராமாநுஜகூட ஹாலிலேயே இந்த மகாநாடு வழக்கப்படி நடைபெற்றது. மேலே குறித்த வேணுகோபால நாய்க்கரின் தேவியாருடைய தலைமையில் மறுநாள் நடைபெற்ற பெண்கள் மகாநாட்டில் பல பெண்மணிகள் இனிமையாகப் பேசினர்கள், பாடினர்கள். இந்த வைணவ மகாசபை நமது சம்பிரதாயத்தின் முன்னேற்றத்திற்கு மிகவும் பாடுபட்டு வருவதனல் நீடூழி வாழ்கவென்று நிச்சலும் காப்பிட வுரியது.

(P. B. A.)

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்

# திருவத்யயனேத்ஸவ வைபவ தீபிகை

— ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர் —



வெண்பா.

திருவத் யயனமெனும் சீர்மைமிகு நன்னுள்
பெருமைதனைப் பேசப் புகுவான் - திருமகள்கோன்
வண்ணங்க ளெல்லாம் வகுத்துரைக்கு நாவீறன்
அண்ணங்க ராசாரி யன்.

ஸ்ரீ வைஷ்ணவ தேவாலயங்களுக்கு அஸாதாரணமாய் ஆச்சரியமாக அனுபவிக்கப்பட்டு வருமதான மஹோத்ஸவம் திருவத்யயநோத்ஸவமென்பது. இது பகற் பத்து, இராப்பத்து எனவும் வழங்கப்பெறும். இம்மஹோத்ஸவத்திற்கு வாய்த்த காலம் மார்கழி மாதத்து சுக்லபக்ஷ ஏகாதசிக்கு(அதாவது வைகுண்ட ஏகாதசிக்கு) முன் பத்து நாட்களும் பின் பத்து நாட்களும். விஷ்ணுவாலயங்கள் தோறும் பெரும்பாலும் நடை பெற்று வருமிந்த மஹோத்ஸவத்தை உலகமெல்லாம் கட் கூடாக அனுபவித்து வருவதால் இதன் சிறப்பைப் புதிதாக நாம் தெரிவிக்க வேண்டுவதில்லை. ஆனாலும், இம்மஹோத்ஸவம் எதற்காக ஏற்பட்டது? எப்போது ஏற்பட்டது? யார் ஏற்படுத்தியது? இத்யாதி விஷயங்களில் பலர்க்கு ஜிஜ்ஞாஸையிருக்கு மாதலால் அது பற்றி இங்குச் சிறிது விவரிக்க விரும்புகிறேன்.

''ஸகல மதங்களிலும் பக்தர்கள் தம் தமக்கு வாய்த்த பாஷைகளில் தோத்திரங்கள் இயற்றியுள்ளார்கள்; வைணவ மதத்தில் ஆழ்வார்களென்கிற பக்தர்கள் பாடியுள்ளார்கள்; பக்தி நூல்களெல்லாம் சமமானவையே'' என்று சொல்லிப் போருமவர்களின் சொலவுக்கு இடமறும்படி செய்து ஸ்ரீவைஷ்ணவப் பேராசிரியர்கள் ஆயிரமாண்டுகட்கு மேற்பட்ட முற்காலத்திலேயே ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தங்களுக்குச் செய்து வைத்திருக்கும் சிறப்புகளை இதனுல்உலகமுணர வேண்டுவது முக்கியம். இந்த மஹோத்ஸவம் முதன் முதலாக, திருவரங்கம் பெரிய கோயிலென்றும் நம்பெருமாள் ஸன்னிதி யென்றும் வழங்கப்பட்டு வருகிற ஸ்ரீரங்கத்தில் தொடக்கமாயிற்று என்பதை ஈண்டு விவரிக்கக் காண்மின். ஆழ்வார்களின் வரிசையில் அந்தத்திலே நிற்பவரான திருமங்கையாழ்வார் பாசுரங்களருளிச் செய்துகொண்டே திவ்ய தேச யாத்திரையாக எழுந்தருளுங்காலத்திலே சோழநாட்டுத் திருப்பதிகளையெல்லாம் மங்களாசாஸனம் செய்து முடித்துத் திருவரங்கம் பெரிய கோயிலுக்கெழுந்தருள வேணுமென்றிருக்கையில் திருப்புள்ளம் பூதங்குடி ஸமீபத்தில் எழுந்தருளியிருக்கும்போது ஸ்ரீரங்கநாதன் ஆழ்வாருடைய கனவிலே காட்சிதந்து உடனே ஸ்ரீரங்கம்வந்துசேர்ந்து ப்ராகார கோபுரமண்டபாதி நிர்மாண கைங்கரியத்தை நிறைவேற்றவேணு மென்று நியமித்தருள, அந்த நியமனத்தை சிரஸாவஹித்த ஆழ்வார் *கூந்தல்கமழுங் கூடலூரிலிருந்து புறப்பட்டுக் கனவேகமாகத் திருவரங்கப்பதியை நோக்கிச் செல்லுகையில் திருவெள்ளறை ப்ராப்தமாக அங்கு ஸ்ரீச்வேதாத்ரிநாதனை மங்களாசாஸனம்செய்துவிட்டு ஸ்ரீரங்கம் சென்று சேர்ந்தார். அரங்கன் நியமித்த கைங்கரியத்தைநிறைவேற்றிவிட்டே மேற்கொண்டு பாசுரங்கள் பாடுவதென்று ஓலைச்சுவடியைக்கட்டிவைத்திட்டு ப்ராகாரமண்டபாதிநிர்மாணத்தை

நிறைவேற்றினர். "ரங்கபுரே மணிமண்டபவப்ரகணந் விததே பரகாலகவி" என்று பட்டர் முத்திரையிட்டருளினபடியாலே இது நிர்விவாதம் அப்போதுகோபுரப்ராகாராதிதிருப்பணி களைக்கண்டு திருவுள்ளமுகந்தருளின ரங்கநாதன் ஆழ்வார்க்குச் சில ஸத்கார விசேஷங்களைச் செய்ய மநோரதித்திருக்கையில்-'இன்னமும் சில கைங்கரியங்கள் இங்கு ஸாவசேஷமாயிருக்கையாலே அடியேன் திவ்ய தேசயாத்திரையைப் பரிபூர்த்தி செய்துகொண்டு இவ்விடம் விடைகொள்ளுகிறேன்' என்று விஜ்ஞாபித்து நியமனம் பெற்று அங்கு நின்றும் புறப்பட்டு அப்பக்குடத்தான் ஸன்னிதி வழியாக நாதன்கோவில் திருவிண்ணகர் திருநறையூர் திருச்சேறை திருவழுந்தூர் சிறுபுலியூர் திருக்கண்ணமங்கை திருக்கண்ணபுரம் திருக்கண்ணங்குடி திருநாகை ஆகிய சோழநாட்டுத் திருப்பதிகளில் சேஷித்திருந்தவற்றை மங்களாசாஸனம் பண்ணித் தலைக்கட்டிப் பாண்டிநாடு மலைநாடுகளிலும் ஸேவித்து திவ்வியப் பிரபந்தங்களையெல்லாம் தலைக்கட்டி, சரமப்பிரபந்தமான திருநெடுந்தாண்டகத்தின்இறுதிப்பகுதியில் *பொருகயல் கண்ணீரரும்பப் புலவிதந்து புனலரங்கமூரென்று போயினரே* *பொன்னலர்ந்த நறுஞ் செருந்திப்பொழிலினூடே புனலரங்கமூரென்று போயினரே* என்னும் பாசுரங்களினால் அரங்கநாதன் மீண்டும் தம்மையழைக்கிறபடியை ஸூசிப்பித்து அங்கேற விடைகொண்டு அரங்கன் திருமுன்பே 'நாயந்தே! நாயந்தே! என்று ப்ரஹ்வாஞ்ஜலிபுடராய்நிற்க, பெரியபெருமாள் இவர்க்கு விலக்ஷண ஸத்கார விசேஷங்கள் செய்தருள மநோரதித்திருந்தது கண்டு ஆழ்வார் விஜ்ஞாபித்தார் --"அடியேனுடைய சில பிரார்த்தனைகளைத் திருச்செவி சாத்தியருளித் தலைக்கட்டுவதே அடியேனுக்கு ஸத்காரமாகும்; நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழிக்கு வேதஸாம்யம் தந்தருளவேணும்: அடியேனைப்போன்ற பக்தர்கள் [ஆழ்வார்கள்]பாடியுள்ள பாடல்களையெல்லாம் பெரிய திருவோலக்கமாக விருந்து திருச்செவி சாத்தியருளவேணும்; நம்மாழ்வார் அவாவற்று வீடுபெற்றது மார்கழித்திங்களில் சுக்லைகாதசியன்றாகையாலே அதற்கு முன்னே பத்துநாளும், அந்நாள் முதலாகப் பத்துநாளுமாகச் சிறிய திருவத்யயநோத்ஸவமும் பெரிய திருவத்யயநோத்ஸவமும் கண்டருளி அடியார்கள் குழாங்களை ஆனந்தவமுதக்கடலிலே அமிழச்செய்தருளவேணுமென்பது அடியேனுடைய பிரார்த்தனை. இதைத் தலைக்கட்டியருள்வதே அடியேனுக்குச் செய்தருளும் ஸத்காரமாகும்" —என்று. இவ்வளவும் கேட்ட பெரியபெருமாள் 'ஆழ்வீர்; திருவாய்மொழிக்கு வேத ஸாம்யமன்றோ நீர்கேட்பது; வேதத்திற்காட்டிலும் ஆதிக்யமும் நாம் தந்தோம்; வேதத்திற்கு அங்கோபாங்கங்கள் போலே திருவாய்மொழிக்கு அங்கோபாங்கங்களாயமைந்த மற்றுள்ள திவ்யப்ரபந்தங்களுக்கு வேதஸாம்யம் தந்தோம். மற்றும் நீர் விரும்பினதெல்லாம் அங்ஙனமேயாகும், என்று திருவுள்ளமுவந்து பணித்தபடி. இந்த பிரார்த்தனையும் கட்டளையும் அப்போது எந்தவிதமாக நிறைவேறிற்றென்பது காலப்பழமையாலே தெரிந்துகொள்ள முடியாமலிருக்கின்றது. இடையில் திவ்வியப் பிரபந்தங்களும் மலினமாய்ப் போயின நாதமுனிகளின் காலத்திற்குப்பின் ஸகலமும் ஸுபரிஷ்க்ருதமாய் ஸுபிக்ஷமாயிற்று

கலியுகத்தில் நம்மாழ்வார்க்குமுன்பு திருநாடு செல்வார் யாருமில்லாமையாலே வைகுந்த நீள்வாசற்கதவு மூடப்பட்டேயிருந்து ஆழ்வார் அவாவற்றுவீடு பெற்றவன்றே அது திறக்கப்பட்டதென்னு மைதிஹ்யத்தை நினைப்பூட்டவே வைகுண்டைகாதசியன்று பரமபதவாசல் திறப்பதென்கிற ஸம்ப்ரதாயம் நிகழ்வதாம். நம்மாழ்வார் வைகுந்தம் புக்க ஏகாதசியென்கிற காரணம்பற்றி வைகுண்டைகாதசியென்று இந்த நன்னாள் வழங்கப்பெற்றது. .... .... *

நிகமாந்த குருவரர்தாம் பணித்த குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்தில் ஸ்ரீமந்நாத முனிகளைப் பற்றி ப்ரஸ்தாவித்து வருகையில் "இவர்க்கு யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராய் நம்மாழ்வார் ஆசார்யரானார்" என்றருளிச் செய்திருக்கையாலே

நாத முனிகள் நம்மாழ்வார் திருவாக்காலே நாலாயிர திவ்யப்ரபந்தங்களைப்பெற்று ப்ரசாரம்செய்தருளினுரென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகின்றது. நாத முனிகளுக்கு பாகிநேயர்களிருவர். அவர்களது திருநாமம் கீழையகத்தாழ்வார், மேலையகத்தாழ்வார் என்பதாம். அவர்களிருவரும் குசலவர்கள் போலே ஸங்கீதகலாப்ரவீணர்களாய் தேவகான நிபுணர்களாயிருந்தபடியாலே அவர்கள் தமது மாதுலரான நாத முனிகள் பக்கலிலிருந்து பெற்ற திவ்ய ப்ரபந்தங்களை பகவதாஜ்ஞையாலும் நாத முனிகளின் நியமனத்தினுலும் தாளத்துடன் திருவரங்கேசன் திருமுன்பே ஸேவிக்கத் தொடங்கினுர்கள். மேலே ப்ரஸ்தாவித்த குருபரம்பராஸார ரஹஸ்யத்தின் முடிவில் "காளம் வலம்புரியன்ன நற்காதலடியவர்க்குத், தாளம் வழங்கித் தமிழ் மறையின்னிசை தந்த வள்ளல், மூளும் தவநெறி மூட்டிய நாதமுனிகழலே, நாளுந் தொழு தெழுவோம் நமக்கார் நிகர் நானிலத்தே." என்றிட்ட பாட்டினுல் இந்த விஷயம் வியக்தமாகவிளங்கும்.

தாளவிசையோடு செய்யத் தொடங்கிய அந்த தேவகானந்தான் '**அரையர் ஸேவை**' என்று இன்றைக்கும்பேர் பெற்று வருகின்றது, அக்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் மட்டுமன்றிக்கே மற்றுஞ்சில திருப்பதிகளிலும் (ஸ்ரீவில்லி புத்தூர், ஆழ்வார் திருநகரி, திருக்குறுங்குடி முதலானவற்றிலும்) அரையர் கானம் நடைபெற்று வந்தது; இது இன்றைக்குங் காண்கிறது, அரையரென்னுந் திருநாமம் பூண்ட இசைகாரர்கள் ஆளவந்தார் காலத்திலேயே யிருந்து வந்ததாக நூல்களில் நன்கு காண்கிருேம்; *பஞ்சாசார்ய பதாச்ரிதரான எம்பெருமானுருடைய ஆசாரியர்கள் ஐவரில் ஒருவர் அரையர், அவரே மேலே ப்ரஸ்தாவித்த குருபரம் பராஸாரத்தில் '**ஆளவந்தாராழ்வார்**' என்று வ்யபதேசிக்கப்பட்டவர், ,,எம்பெருமானுர்....ஆளவந்தாராழ்வார் ஸ்ரீ பாதத்திலே திருவாய்மொழியுமோதி ஸ்தோத்ராதிகளும் அருளிச் செய்யும் நல்வார்த்தைகளும் கேட்டருளினுர்" என்பது அவ்விடத்தில் நிகமாந்த குருபணித்த ஸூக்தி. திருவரங்கப் பெருமாளரையர், வரந்தரும் பெருமாளரையர், பிள்ளை திருநறையூரரையர் .... இத்யாதிகளான அரையர் திரு நாமங்களை ஆளவந்தார் காலத்திலும் எம் பெருமானுர் காலத்திலும் பரவியிருக்கக் காண்கிருேம். திருவத்யயநோத்ஸவத்தில் அரையர்கள் இப்போது போல் அப்போதும் அபிநயங்கள் செய்து வந்தார்களென்பதை திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் ஸ்பஷ்டமாகக் காண்கிருேம். அந்த அபிநயங்களை எம்பெருமானுர் எம்பார் முதலான பேராசிரியர்கள் திருவோலக்கத்திலிருந்து கொண்டு அநுபவித்ததையும் பெரியாழ்வார் திருமொழி பெருமாள் திருமொழிவியாக்கியானம் முதலானவற்றில் காண்கிருேம். கோயிலில் அரையர்களுக்கு ஏற்பட்டிருக்கும் கௌரவமும் பஹுமான விசேஷங்களும் அப்ரமேயம். பகற்பத்திலும் இராப்பத்திலும் மூன்று நாள் அரையர்கள் திருக்கையிலே அர்ச்சகர்கள் ஸ்ரீசடகோபனைத்தந்து கோஷ்டிக்குப்ரஸாதிக்கும்படியான பெருமையையும், சிலநாட்களில் தீர்த்தமும் ப்ரஸாதிக்கும்படியான பெருமையையும் கட்கூடாகக் கண்டுவருகிருேம். இதெல்லாம் ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையினுலன்றி மற்றபடி ஸாமான்ய புருஷர்களின் ஏற்பாட்டினுல் நடைபெறக்கூடியதன்று.

பகற்பத்திலும் இராப்பத்திலும் மூவாயிரம் பாசுரங்களை அரையர்கள் ஸேவித்துவருவதென்றும், இருபத்தோராநாளில் திருவரங்கத்தமுதனுருடைய திருவம்சஸ்தர் பெரியபெருமாளுடைய ஆஸ்தானத் திருவோலக்கத்திலே இயற்பா ஆயிரத்தையும்ஸேவித்து வருவதென்றும் அன்றுதோன்றின திவ்யாஜ்ஞை பொலிக பொலிகவென்று காப்பிடக்கூடிய நிலைமையிலன்றே நிகழ்ந்து வருகின்றது. பரமவைதிகர்களான ஸ்ரீமந்நாத யாமுந யதிவராதிகளின் பரிக்ரஹாதிசயத்தினுல் இங்ஙனே பொலிவுபெற்ற திவ்வியப்ரபந்தங்களை, வைதிகர்கள் காதால் கேட்கவும் அருவருக்கும்படியாய் ஐகந்ய ஜாதீயர்களே பாடிப்போருமவையான பாட்டுக்களோடொக்க

வெண்ணுதலும், *ச்வ யுவ மகோநாம் அதத்திதே* என்கிற பாணிநிஸூத்ரத்தை நோக்கி "விசேஷவித் பாணிநி ரேகஸூத்ரே ச்வாநம் யுவாநம் மகவாநமூசே" என்று பரமரஸிகரொருவர் பணித்ததை நினைப்பூட்டு மாறு "திருப்பாவை திருவெம்பாவை மகாநாடு" என்பதும் "திருவெம்பாவை திருப்பாவை மகாநாடு" என்பதும் கலிகோலாஹலஸாம் ராஜ்யமத்தனையன்றோ. இதுநிற்க.



இந்தத் திருவத்யயன மஹோத்ஸவம் முதன் முதலாகத்திருமங்கையாழ்வாரால் திருவரங்கம் பெரிய கோயிலில் தொடங்கப் பட்டதென்றும், அப்போது நம்மாழ்வாரொருவர் மட்டுமே ஆழ்வார் திருநகரியிலிருந்து எழுந்தருளிச் செய்யப்பட்டு நடந்ததென்றும், ஸ்ரீமந்நாதமுனிகள் காலத்திலும் அவ்வண்ணமாகவே நடந்து வந்ததென்றும், பிறகு ஆழ்வார்களினுடைய திவ்ய மங்களவிக்ரஹப்ரதிஷ்டை கோயிலில் ஏற்பட்டுஆழ்வார்களெல்லாருமெழுந்தருளியிருந்து நடந்து வந்ததென்றும், நாளடைவில் ஆசாரியர்களின் திவ்யமங்கள விக்ரஹப்ரதிஷ்டையுமாகி, இந்தபத்ததி ஸகலதிவ்ய தேசங்களிலும் வியாபித்து *கண்டோங்கண்டோங் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம், தொண்டீரெல் லீரும் வாரீர் தொழுது தொழுது நின்றார்த்தும்* என்னும் படியாக நிகழ்ந்து வருகின்றதென்றும் பெரியார் பணித்தருளும் ப்ரக்ரியை.

நமக்கு ஸந்நிஹிதமான தேவப்பெருமாள் ஸன்னிதி, ஸ்ரீபார்த்தஸாரதி ஸன்னிதி, எம்பெருமானார்ஸன்னிதி முதலான திருத்தலங்களில் இந்த மஹோத்ஸவம் நடந்து வரும் வைகரியை அநுபவித்து ஆனந்திக்குமவர்களுக்கு இப்போது அடியேன் உபஹரிக்க நினைப்பது இவ்வாழ்வாராசாரியர்களின் ப்ரபாவஸம்க்ஷேபம். ப்ரஸ்துதமான திருவத்யயநோத்ஸவகோஷ்டியில் அந்வயித்தருள்கின்ற ஆழ்வாராசாரியர்களின் பெருமைகளை மட்டும் இங்கு விஜ்ஞாபிக்கிறபடி.

ஆசார்யஹ்ருதய திவ்யக்ரந்தத்தில் "விப்ரர்க்கு கோத்ர சரண ஸூத்ரகூடஸ்தர் பராசர பாரா சர்ய போதாயநாதிகள்; ப்ரபந்ந ஜநகூடஸ்தர் பராங்குச பரகலய திவராதிகள்"

என்றருளிச் செய்திருக்கிறபடி பராங்குச பரகாலயதிவரர்களென்கிறமூவர்க்கு இந்த மஹோத்ஸவத்தில் விசேஷித்து ஆதிக்யம் அநுபவத்திலுள்ளது. பராங்குசரென்பது நம்மாழ்வாரை; பரகாலரென்பது திருமங்கையாழ்வாரை; யதிவரரென்கிறது எம்பெருமானாரை. இம்மூவர்க்கு முக்க்யத்வம் எதனாலே யென்னில்; நம்மாழ்வாருடைய முக்க்யத்வத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. இம்மஹோத்ஸவத்தைத் தொடங்கினவரென்கிற காரணத்தினால் அடுத்தபடி பரகாலர் பரிகணிதரானார். பிறகு இதனை மிகமிகப் பரிஷ்கரித்தருளினவரென்கிற காரணத்தினால் அடுத்தபடி யதிவரர் பரிகணிதரானார்.

இற்றைக்கும் திருவரங்கம் பெரியகோயிலில் இம்மூவர்க்குமட்டுமுள்ள முக்கியத்வத்தை இத்திருவத்யயநமஹோத்ஸவத்தில் நாடோறும் கண்குளிரக் காணுநின்றோம். ஆகவே முந்துறமுன்னம் இம்மூவருடையவும் மஹிமார்ணவத்தில் சில சீகரங்களை யெடுத்துரைத்து விட்டுப் பிறகு முதலாழ்வார்கள் தொடங்கியநுபவிப்பேன். .... .... .... .... ....

## நம்மாழ்வார் பெருமை

காரிமாறன், குருகூர்ச்சடகோபன், வகுளாபரணன், மகிழ்மாலைமார்பினன், பராங்குசர், ஸ்ரீசடாரி, ப்ரபந்நஜநகூடஸ்தர்....இவைமுதலான திருநாமங்களும் இவர்க்குள்ளன. ஆழ்வார்களுள் இவர் ஐந்தாமவராகத் தோன்றினரெனினும் வைபவவிசேஷங்களினால் இவரே முதன்மைபெற்றவர். இவர் அவயவியென்றும் மற்றையாழ்வார்கள் இவர்க்கு அவயவபூதர்களென்றும் ஸ்ரீவைஷ்ணவபரமாசார்யர்களால் கொள்ளப்பட்டிருக்கின்றது. ஒரு காலவிசேஷத்தில் திவ்வியப் பிரபந்தங்களெல்லாம் லோபமடைந்திருக்கையில், ஆசார்யபரம்பரையில் தலைவரான ஸ்ரீமந்நாத முனிகள் இவ்வாழ்வார் விஷயமாக மதுரகவிகள் அருளிச் செய்திருந்த *கண்ணிநுண்சிறுத்தாம்பு பிரபந்தத்தை நியமத்துடன் ஜபித்து யோகதசையிலே இவரை ஸாக்ஷாத்கரித்து இவர் முகமாகவே நாலாயிரதிவ்யப் பிரபந்தங்களையும் உபதேசிக்கப் பெற்றார்; ஆனதுபற்றியே இவருடைய வாழித்திருநாமத்தில் "நாதனுக்கு நாலாயிரமுரைத்தான்வாழியே" என்று அநுஸந்தானம்செய்யப் படுகின்றது உலகில் பயிர்செய்பவன் தான் செய்யும்பயிர் பழுதுபட்டாலும் சோம்பிக் கைவாங்காமல் பின்னையும் க்ருஷியையே பண்ணுமாபோலே கல்பந்தோறும் ஜகத்ஸ்ருஷ்டியைப் பண்ணிப் போராநின்ற எம்பெருமான் அந்த ஸ்ருஷ்டி ஸபலமாகாமலிருந்தும் சிறிதும்விரக்தியடையாமல் என்றேனுமொருநாள் பலிக்கவேபலிக்குமென்று உகந்து ஸ்ருஷ்டியையே பண்ணிக் கொண்டுவந்தும், படைத்த அந்த ஜகத்தில் அநுப்ரவேசித்தும், அறியவேண்டு மர்த்தங்களையெல்லாம் அறிவிக்குமதான சாஸ்த்ரங்களையுபதேசித்தும், *உறங்குவான் போல் யோகு செய்தபெருமான்* என்கிறபடியே நித்ராமுத்ரையாலே ஜகத் ரக்ஷண சிந்தைபண்ணியும், சிந்தித்தவுபாயத்திற்குத் தகுதியாக *மனிசரும்மற்றும் முற்றுமாய் மாயப்பிறவி பிறந்த* என்கிறபடியே மநுஷ்யாதி யோனிகளிலே கண்காணவந்து பிறந்தும் 'எனக்கு அடிமை யாவாருண்டோ' என்று இதுவேகாரியமாகத் தேடித்திரியா நின்றான். அந்தோ! ஒருவரும் அடிமைக்கிசைந்துவந்து அவனுடைய க்ருஷியை ஸபல மாக்கிற்றிலர். சிற்றின்பங்களிலே ஆழ்ந்து அழுந்திவருந்துவதே உலகவியற்கையாக இருந்தது. இவ்வுலகவியற்கையைமாற்றி ஸம்ஸாரி சேதநர்களைத் தன்பக்கலில் ஈடுபடுத்துவதற்குத் தன்னாலாகாதென்றும், ம்ருகத்தைக் கொண்டே ம்ருகத்தைப்பிடிப்பது போல ஸம்ஸாரிகளி லொருவரைக் கொண்டே ஸம்ஸாரிகளை வலைப்படுத்திக் கொள்ள வேணு மென்றும் நிச்சயித்து, அப்படிப்பட்ட அதிகாரியைத் தேடுகையில், *அன்பொடு தென் திசைநோக்கி* என்கிறபடியே தனது அன்பார்ந்த நோக்குக்குப் பள்ளமடையான தென் திசையிலே இவ்வாழ்வார்மேலே தன்னுடைய கடாக்ஷாம்ருத தாரையைப் பெருகவிட்டான். இதனை இவ்வாழ்வார்தாமுமறிந்து தமது முதற் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில் "பெருங்கேழலார் தம் 'பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்" என்கிற பாசுரத்தினால் வெளியிட்டார்.

அந்த திவ்ய கடாக்ஷமடியாகத் தோன்றின இவ்வாழ்வார்க்கு அளவுகடந்த அதிசயங்கள் அமைந்தன. உபய விபூதியிலு மடங்காத பெருமை வாய்ந்த பரப்ரஹ்மத்தைத் தம்முடைய ஹ்ருதய ஏக தேசத்திலே யடக்கி "புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீ என் செவியின் வழி புகுந்து என்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன், நீ பெரியை யென்பதனை யாரறிவார்? ஊன் பருகுநேமியாய்! உள்ளு." (பெரிய திருவந்தாதி) என்கிற பாசுரத்தினல் எம்பெருமானேடேபோராடும்படியான பெருமை பெற்றார்; (அதாவது) பிரானே! நீ பரப்ரஹ்ம மென்று பேர் சுமக்கின்றாயே, இது உனக்குத் தகுமா? தன்னைக் காட்டிலும் பெரியதொரு வஸ்துவில்லாதபடி தானே மிகப் பெரிதாகவுள்ள வஸ்துவன்றோ பரப்ரஹ்ம மென்னத் தகும்; என் செவிவழியாகப் புகுந்து என்னுள்ளே அடங்கி நிற்கிறாய் நீ; உபய விபூதிமானான உன்னையு மடக்கிக் கொண்டிருக்கிற நானன்றோ பெரியவன்; என்னுள் அடங்கி நிற்கிற நீ பெரியவனாகத் தகுமோ? என்று கேட்டால் விடை யிறுக்க வல்லமை யில்லை யாயிற்று எம்பெருமானுக்கு. நாமெல்லாருங் கூட பகவானை ஹ்ருதயத்தில் அடக்கிக்கொண்டுதானிருக்கிறோ மென்று ஒவ்வொருவரும் நினைத்துக் கொள்ளலாமானாலும் "கண்கள் சிவந்து பெரியவாய் வாயுஞ் சிவந்து கனிந்து, உள்ளே வெண்பலிலகுசுடரிலகு விலகு மகர குண்டலத்தன், கொண்டல் வண்ணன் சுடர்முடியன் நான்கு தோளன்குனி சார்ங்கன் ஒண் சங்கதை வாளாழியா னொருவன் அடியேனுள்ளானே" [திருவாய் மொழி 8—8—1.] என்னும்படியும் *வெள்ளைச் சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக் கண்ணனென்னெஞ்சினூடே, புள்ளைக் கடாகின்ற வாற்றைக்காணீர்! என் சொல்லிச் சொல்லுகேன்* [தி. 7—3—1.] என்னும் படியும் இவர் திருவுள்ளத்தே எம்பெருமான் அடங்கி நிற்குந் தன்மை லோக விலக்ஷணமன்றோ.

இவ்வாழ்வாருடைய த்யானச்லோகமாக வழங்கிவருகின்ற

*** யத்கோஸஹஸ்ரமபஹந்தி தமாம்ஸி பும்ஸாம்**
**நாராயணோ வஸதி யத்ர ஸசங்கசக்ர:,**
**யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்ராஸ்**
**தஸ்மை நமோ வகுளபூஷணபாஸ்கராய. ***

என்கிற ச்லோகம் மிக அற்புதமானது. நம்மாழ்வார் இவ்வுலகின் அகவிருளை அகற்றத் தோன்றிய விலக்ஷண ஸூர்யன். எல்லாருங் கண்ட ஸஹஸ்ரகிரணனான ஸூர்யன் தனது ஆயிரங் கிரணங்களினாலும் புறவிருளைமட்டும் போக்குகின்றான் இந்த வகுள பூஷணபாஸ்கரர் தமது ஆயிரம் பாசுரங்களினாலும் உலகத்தின் அகவிருளையும் போக்குகின்றார். ஸூர்யன் *** த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட:, கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபுர் த்ருதசங்கசக்ர: *** என்று உலகமெங்கும் ஸுப்ரஸித்தமாக அந்தணர் யாவருமநுஸந்திக்கின்ற ச்லோகத்தின் படியே திவ்யாபரண திவ்யாயுத பூஷிதனான ஸ்ரீமந்நாராயணன் தன்னிடத்திலே நித்யவாஸஞ் செய்யப் பெற்றவன்; இந்த வகுளபூஷண பாஸ்கரரும் *கண்கள் சிவந்து* என்று கீழேயெடுத்துக் காட்டிய பாசுரத்தின்படியே அப்படிப்பட்டவர். [யந்மண்டலம் ச்ருதிகதம் ப்ரணமந்தி விப்រா;] சிலேடையாக அமைக்கப்பட்டது; வேதப்ரதிபாத்யமான ஸூர்ய மண்டலத்தை அந்தணர்கள் ஸந்த்யா வந்தநக்ருத்யத்தினல் முச்சந்தியும் தொழுகின்றனர்; மண்டல மென்று திருவவதாரஸ்தலத்திற்கும் பெயர்; ச்ருதியென்று காதுக்கும் பெயர்; திருக்குருகூர் என்றோ ஆழ்வார் திருநகரி யென்றோ காதில் விழுந்தவாறே ஸகலபக்த ஜநங்களும் மத்தகத்திடைக் கைகளைக் கூப்பிநிற்பர். ஆக இவ்வகைகளாலே உள்ளபடி ஸூர்யனென்றே நிரூபிக்கத் தகுந்தவர் இவ்வாழ்வார்.

இவ்வாழ்வாருடைய திருவவதாரத்தை மஹர்ஷிகளும் தங்களுடைய புராண நூல்களில் ஸூசிப்பித்திருக்கிறார்கள். எங்ஙனே யென்னில்; ஸ்ரீ பாகவதத்தில் பதினோராம் ஸ்கந்தத்தில் ஐந்தாவது அத்யாயத்தில் முப்பத்தெட்டாவது ச்லோகம் தொடங்கி ஸ்பஷ்டமாகவே காணலாம்; * க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம், கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணாः— *....த்ரமிடேஷு ச பூரிசः- தாம்ரபர்ணீ நதீ யத்ர * என்பவை முதலான ச்லோகங்கள் குறிக்கொள்ளத் தக்கவை. க்ருதயுகம் முதலான முன்யுகங்களில் தோன்றியிருந்த சில மனிசர்கள் கலியுகத்தில் அவதரிக்க வேணு மென்று ஆசை கொண்டிருந்தார்கள். அவர்கள் ஸ்ரீமந் நாராயணனையே பரதெய்வமாகக் கொண்டவர்களாய்க் கலியுகத்தில் அவதரிக்கப் போகிறார்கள். ஏதோ சில சில இடங்களில் அவதரிப்பர்கள். தமிழ்நாடுகளிலோ வென்னில் பெரும்பான்மையாக அவதரிப்பர்கள். தாமிரபர்ணி, க்ருதமாலை, பாலாறு; காவேரி என்னு மிப் புண்ணிய நதிகள் எவ்விடங்களில் பெருகுகின்றனவோ அவ்விடங்களில் [அவற்றின் கரையிலே] அவதரிப்பர்கள்.—என்று இந்த ச்லோகங்களில் கூறப்பட்டுள்ளது. இந்த நதிகளை யெடுக்கும்போது தாமிரபர்ணி நதியை முந்துற முன்னம் எடுக்கையாலே நம்மாழ்வாருடைய திருவவதாரமே மஹர்ஷிகளால் முக்கியமாகக் கருதப்பட்டதென்பது வெளிப்படை. ஆழ்வார்களிற் சிறந்த நம்மாழ்வாரும் ஆசாரியர்களிற் சிறந்த மணவாளமாமுனிகளும் தாமிரபர்ணிக்கரையில் திருவவதரித்த மஹா புருஷர்களன்றோ.

இவ்வாழ்வாரை ஸாக்ஷாத் பகவதவதாரமேயாகவும் கொள்வர். பகவான் க்ருதயுகத்தில் தத்தாத்ரேயனும் பரசுராமனுமாய் ப்ராஹ்மண குலத்தில் தோன்றினன்; அவனே அடுத்த த்ரேதாயுகத்தில் க்ஷத்ரியனாக தசரத சக்கரவர்த்திக்குப் பிள்ளையாய்த் தோன்றினன்; அவனே த்வாபரயுகத்தில்—வைச்யப்ராயரான வஸுதேவர்க்கும், பசுரக்ஷணத்தாலே ஸாக்ஷாத் வைச்யரான நந்த கோபர்க்கும் பிள்ளையாய்த் தோன்றினன். இப்படி யுகக்ரமத்தில் வர்ணக்ரமமாக அவதரித்த பரம புருஷன் நான்காவது யுகமான இக்கலியுகத்தில் நான்காவது வருணத்திலே அவதரிக்க வேண்டி ஆழ்வாராக அவதரித்தனனோ! என்று சங்கிக்க ஔசித்யமுண்டு. வேதங்களைப் பரிஷ்கரிப்பது முதலிய காரியங்களுக்காக வியாஸர் முதலானோரிடத்தில் ஆவேசித்தாப்போலே த்ராவிட வேத ப்ரவர்த்தநார்த்தமாக இவர்பக்கல் ஆவேசித்த படியோ! என்றும் சங்கிப்பர்கள், இவ்விபூதியைத் திருத்துகைக்காக ஈச்வரனுடைய நியமனத்தினால் நித்ய முக்தர்களிலே யொருவர் வந்து அவதரித்தபடியோ! என்றும் சங்கிப்பர்கள். இன்னமும்சில முக்கியமான பெருமைகளைக்கேளீர்

மஹர்ஷிகளென்று கொண்டாடப்படுகிற வ்யாஸ பராசர வால்மீகி ப்ரப்ருதிகளிற் காட்டிலும் ஆழ்வார் மிக்க மேம்பாடு உற்றவர்; அவ்விருடிகள் கனி காய் கிழங்கு சருகு காற்று தண்ணீராகிய இவற்றையே தாரக போஷக போக்யங்களாகக் கொண்டிருந்தார்கள்.*ரிஷிம் ஜுஷாமஹே க்ருஷ்ணத்ருஷ்ணா தத்வமிவோதிதம்* என்று பட்டர் அருளிச் செய்தபடி எம்பெருமான் விஷயமான காதலே வடிவெடுத்தவரான ஆழ்வாரோ வென்னில் * உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன் * என்று தாமே யருளிச்செய்தபடி தாரக போஷக போக்கியங்களெல்லாம் கண்ணனான எம்பெருமானே யாயிருப்பர். ரிஷிகளின் சரித்திரங்களைக் காணும்போது அவர்கள் ஸம்ஸாரப் பற்று அறாதவர்களென்பது விளங்கும். வஸிஷ்ட பகவான் புத்திரனிறந்த வருத்தத்தினால் மரணத்தை விரும்பி மலையிலேறி விழுவது, நெருப்பிலே குதிப்பது. கழுத்திலே கல்லைக் கட்டிக்கொண்டு கடலிலே விழுவது ஆகவிப்படி யெல்லாம் தடுமாறினா ரென்றும், வேதவ்யாஸ பகவான் புத்திரவியோகம் பொறுக்க மாட்டாமல் புத்திரனே! யென்று வாய்விட்டுக்

"வ்யோம்ந: பரஸ்தாத் ஸவிதம் ஸமேத்ய
லக்ஷ்ம்யா நியோகாத் குருகாதிராஜ:
ஸமந்த்ரராஜத்வயமாஹ யஸ்மை
நாதாய தஸ்மை முநயே நமோஸ்து.,.

என்கிற தனியனும் இங்கே அநுஸந்தேயம். இப்படி நம்மாழ்வார் பக்கலிலே ஸர்வஸ்வமும் லபிக்கப்பெற்ற நாதமுனிகள் சிலகாலம் திருநகரியிலேயே வஸித்திருந்து அங்குள்ளார்க்கு அருளிச்செயல்களை ப்ரவசனம் செய்தருளி, பிறகு ஸ்வதேசத்திற்கு மீண்டெழுந்தருளி அந்த திவ்யப்ரபந்தங்களை சாங்கோபசாகமாக ப்ரவர்த்திப்பித்தருளினார். வடமொழி வேதத்திற்கு வேதவ்யாஸர்போலே தமிழ் மறைக்கு நாதமுனிகளென்று ப்ரஸித்தமாயிற்று. .... .... ....

## ஆளவந்தார்

ஸ்ரீமந்நாத முனிகளின் பௌத்திரரான ஆளவந்தாரும் காட்டு மன்னார் ஸன்னிதியிலேயே திருவவதரித்தவர். அத்தலத்தில் ஸேவைஸாதித்தருளும் திவ்ய மங்கள விக்ரஹத்தின் ப்ரதிச்சந்தமே அடுத்தபக்கத்தில் ஸேவைஸாதிப்பது. ஆடி மாதத்து உத்தராடத் திருநன்னாளில் இம்மஹாசார்யருடைய திருவவதாரம்.

நம்முடைய தர்சனத்தில் ஆளவந்தாரைப்போன்ற வித்வத் ஸார்வபௌமர் இதற்குமுன்பு தோன்றினது மில்லை, இனித் தோன்றப் போகிறதுமில்லையென்று திண்ணமாகச்சொல்லலாம். *ந வயம் கவயஸ்து கேவலம் ந வயம் கேவலதந்த்ர பாரகா: * என்று இவர்தாமே யருளிச் செய்தபடி கவித்திறத்தில் வந்தாலும் நாநா சாஸ்த்ர வைதுஷ்யத்தில் வந்தாலும் ஒத்தாரும் மிக்காருமின்றிக்கே அத்விதீயரான வ்யக்தி இவரொருவரே. ஸ்வாமி எம்பெருமானார் இவ்வாசிரியரை நேரில் ஸேவித்து இவர் திருவடிகளிலே பரிசர்யைகளைப் பண்ணி அர்த்த விசேஷங்களை க்ரஹிக்க ப்ராப்தியற்றவரானாலும் "ஆம் முதல்வனிவன்" என்று இவர் விசேஷ கடாக்ஷம் செய்தருளினதே ஹேதுவாக அவர் விளக்கில் கொளுத்தின தீவட்டிபோலே மஹாதேஜஸ்வியாக விளங்கி உலகுக்கு ஒருயிராகி நின்றார். இவ்விஷயத்தை ஸ்வாமி தாமே தம்முடைய திருவாக்கினால் ஒருவாறு காட்டியருளினார். கீதாபாஷ்யத்தின் உபக்ரமத்தில் * யத்பதாம்போருஹத்யாந வித்வஸ்தாசேஷகல்மஷ:; வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம் * என்றருளிச்செய்த ச்லோகம் இங்கு அநுஸந்திக்கவுரியது. இதில்' ஆளவந்தார் தம்மைக் கடாக்ஷித்தருளினதுதானே ஹேதுவாகத் தாம் சீர்மை பெற்றதாக அருளிச் செய்யாமல், தாம் அவருடைய திருவடித் தாமரைகளையே சிந்தித்து அதனால் சீர்மை பெற்றதாகச் சொல்லியிருக்கிறார்; இதனுடைய உட்கருத்து யாதெனில், ஆளவந்தார் என்னைக் கடாக்ஷித்தருளின தன் பயனாகவே நான் அவரது திருவடிமலரைச் சிந்திக்கும் பாக்கியம் பெற்றேனென்பதாம். * குருபாதாம்புஜம் த்யாயேத் * என்கிற சாஸ்த்ரவிதியைப் பின்பற்றியருளிச் செய்தவாறு.

ஸ்வாமி ஆளவந்தாரிடத்தில் நேரில் அர்த்த விசேஷங்கள் கேட்கப்பெறாத குறைதீர அவருடைய திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவர்களெல்லாரையும் தாம் ஆச்ரயித்து ஒவ்வொருவரிடத்திலும் அர்த்த விசேஷங்களை யதிகரித்தது * பஞ்சாசார்யபதாச்ரித: * என்னும் விருதுபெற்றார். "ஆளவந்தாரோடு நான்

கூடியிருந்தேனாயின் பரமபதத்திற்குப் படிகட்டியிருப்பேன், என்று ஸ்வாமி ஸாதித்ததாக ப்ரஸித்தமான வார்த்தையே இவருடைய ஒப்புயர்வற்ற பெருமையை விளக்காநின்றது. நித்ய விபூதியும் லீலாவிபூதியும் சேர்ந்து ஒரு விபூதியாகவே ஆய்விட்டால் உபயவிபூதிநாதனென்று தான் வஹிக்கும் விருதுக்குக்குறை விளைந்திடுமேயென்கிற எண்ணத்தினாலேயே எம்பெருமான் இவ்வாசிரியர்களைக் கூட்டி வைக்கவில்லைபோலும்.

(காட்டுமன்னார்ஸன்னிதி ஆளவந்தார்.)



உபய வேதாந்த ரஹஸ்ய ப்ரஸ்தாநங்களில் இப்போது நாம் அநுபவித்து வரும் அர்த்த விசேஷங்களுக்கெல்லாம் ஆகரம் ஆளவந்தாரேயென்பதில் அத்யுக்தியில்லை. இவரருளிச் செய்த ஸித்தித்ரயம் முதலான உத்துங்க சாஸ்த்ர க்ரந்தங்கள் இருக்கட்டும். ஆளவந்தார் ஸ்தோத்ரம் என்று வழங்குகின்ற ஸ்தோத்ரக்ரந்தமானது மஹாவித்வான்களுக்கும் பக்தர்களுக்கும் *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே* என்று உள்குழைந்து பேசும் படியாக அமைந்து, உட்புகுந்து நோக்க நோக்க உபயவேதாந்த ரஹஸ்யார்த்தங்கள் அனைத்தையும் அழகாகவும் எளிதாகவும் தெளியலாம்படி மஹோபகாரம் செய்திருக்கிற மாண்புவாசாம் அகோசரம். இதற்கு **ஸ்தோத்ர ரத்நம்** என்று திருநாமம் சாத்தியுள்ளார்கள், ஸம்ப்ரதாயம் வல்ல பெரியார்கள் மூன்றுரத்னங்கள் என வழங்குகிறார்கள், (1) ஸ்ரீ விஷ்ணுபுராணத்தைப் புராணரத்நமென்பர்கள். [இது ஆளவந்தார் ஸ்தோத்ரத்தில் நான்காவது சுலோகத்தில் காணத்தக்கது.] (2) த்வயம் என்கிற மந்த்ரத்தை மந்த்ரரத்நமென்பர்கள். [இது ஸ்ரீ வரவரமுநி திநசர்யையில் *மந்த்ர ரத்நாநுஸந்தாந ஸந்தத ஸ்புரிதாதரம்* என்பதில் காணத்தக்கது.] இனி மூன்றுவது ரத்னம் ஸ்தோத்ரரத்ந மென்று வழங்கப்படுகிற இவருடைய ஸ்தோத்ரமேயாகும். இதன் எளிமையும் இனிமையும் வாசாமகோசரம். ஆழ்வான் பட்டர் முதலான ஆசார்யர்கள் பணித்த ஸ்தவங்களுக்கு இந்த ஸ்தோத்ரரத்நமே வழிகாட்டியாயிருந்தாலும் இதனுடைய போக்யதை மற்று எதற்கும் அமையவில்லை. ஆளவந்தாருடைய நியமனத்தினால் எம்பெருமானாரை யீடுபடுத்திக்கொள்வதற்காகக் காஞ்சீபுரத்திற் கெழுந்தருளின பெரிய நம்பி, சாலக்கிணற்றில் நின்றும் திருமஞ்சன தீர்த்த மெழுந்தருளப் பண்ணிக்கொண்டு போராநின்ற அவரை (எம்

பெருமாளுரை)ச் சார்ந்து பின்புறத்திலே இந்த ஸ்தோத்ரரத்நத்தில் ஒரு ச்லோகத்தைச் செவிக்கினிதாக அநுஸந்தித்து வருகையில் எம்பெருமானார் திரும்பிப்பார்த்து 'இது யாருடைய திவ்யஸூக்தி? என்று நம்பியை நோக்கிக் கேட்க, அவரும் 'இது ஆளவந்தாருடைய திவ்யஸூக்தி என்றுரைக்க 'ஆகில் அவரை அடியேன் ஸேவிக்கவேணுமே, என்று எம்பெருமானார் கூற, 'ஆகலாம், நம்மோடே வந்து ஸேவிக்கலாம், என்று பெரிய நம்பி பணிக்க, அப்போதே திருக்கச்சி நம்பியிடம் விடைபெற்றுக்கொண்டு பெரிய நம்பிகளுடன் கோயிலுக்குப் புறப்பட்டருளினதாகக் காண்கிறது. இப்படி எம்பெருமானார் திருவுள்ளத்தைக் கொள்ளைகொண்ட ஸ்ரீஸூக்தியின் பெருமையை நாமோ பகர்வது!..... .... .... *

# திருக்கச்சி நம்பிகள்

**"கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வ யோநிஷு. ப்ரத்யக்ஷிதாத் மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்"** என்று நம் ஆசிரியர்கள் உதாஹரித்தருளியுள்ள பிரமாணத்தின்படி, திருக்கச்சி நம்பிகள் திருவவதரித்த வருணம் எது? என்கிற விசாரத்தில் நாம் வாய்வைப்பது அநபேக்ஷிதம். எக்குலத்தினும் சிறந்த தான தொண்டக்குலமே இவர்தாம் அவதரித்த நற்குலமாகும். மாசிமிருகசீருஷத்தில் பூவிருந்தவல்லியில் இவரது திருவவதாரம்.



இவர், ஆளவந்தார்திருவடிகளில் ஆச்ரயித்து, ஸாமாந்ய விசேஷ சாஸ்த்ரங்களனைத்தையும் அதிகரித்துப் பரம விலக்ஷணராயினர். அர்ச்சாவதார எம்பெருமானுக்குத் திருவாலவட்டத் திருத்தொண்டு செய்வதில் இவர்க்கு இயற்கையான அபிநிவேச முண்டாயது. திருவரங்கம் பெரியகோயிலில் அழகிய மணவாளனுக்கு அந்தத் திருத்தொண்டைச் செய்யப் புகுந்தார். அப்போது பெரிய பெருமாள் "* தெண்ணீர்ப் பொன்னி திரைக் கையாலடிவருடப் பள்ளி கொள்ளுகிற நமக்குத் தாபம் இல்லாமையால் இங்கு உமது திருத்தொண்டு அபேக்ஷிதமாக இல்லையே" என்றருளிச் செய்ய, அங்கு நின்றும் திருவேங்கடமலையேறப் போந்து, அங்கே திருவேங்கடமுடையானுக்கு அந்தத் திருத்தொண்டைச் செய்யப் புகுந்தார். அப்பெருமானும் "குளிரருவி வேங்கடத்தில் குளிரநிற்கும் நமக்கும் இந்தத் திருத்தொண்டுஅபேக்ஷிதமாக இல்லையே; * அயமேத வேள்வியில் அவதரித்த அத்திகிரியருளாளப் பெருமாளுக்கு இது அபேக்ஷிதமாயிருக்கக்கூடும்; அங்கேறச் சென்று தொண்டுசெயது வாழ்வீராக" என்று நியமிக்க, அங்கு நின்றும் ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்ஜ்வல பாரிஜாதமான பேரருளாளனுடைய திருவடிவாரத்திலே விடைகொண்டு திருவாலவட்டமும் கையுமாய் ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி அத்தாணிச்சேவகம் செய்து வந்தார். [நிகமாந்தமஹாகுரு பணித்த குருபரம்பராஸாரத்தில் இவர் பெரிய நம்பி ஸ்ரீபாதத்திலாச்ரயித்தவராகக் காண்பது விசாரணீயம்.] ஆளவந்தார் திருவடியென்றே ப்ரஸித்தி.

இவருடைய ஜ்ஞாநாநுஷ்டாந ஸம்பத்ஸம்ருத்தியையும் பக்திவிரக்திகளின் விலக்ஷணபரிபாகத்தையும் கண்டு வியந்த எம்பெருமானார், தாம் இவரது திருவடிகளில் ஆச்ரயித்து உய்வுபெற வேணுமென்று பாரித்து, இவரை எவ்வளவோ அநுவர்த்தித்தும் மநோரத ஸித்தி பெற்றிலர். ஒருநாள் "போனகஞ் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே" என்ற தொண்டரடிப் பொடியாழ்வார் பாசுரத்தின்படி நம்பிகள் பக்கலில் திருப்போனகசேஷம் பெற வேணுமென்று பாரித்தும், எம்பெருமானார்க்கு அதுதானும் ஸித்தித்ததில்லையாக, பேரருளாளப் பெருமாள் அர்ச்சாவதாரஸமாதியைக் கடந்து நம்பிகளோடே ஸல்லாபம் செய்தருளுகிறபடியை யறிந்த அவ்வெம்பெருமானார், தமக்கு சாஸ்த்ரார்த்தங்களிலே சில ஸந்தேஸங்கள் இருப்பதாகவும், அவற்றின் பரிஹாரத்தைத் தேவப்பெருமாள் மூலமாகப் பெற நினைத்திருப்பதாகவும் நம்பிகள்பாடே விஜ்ஞாபிக்க, நம்பிகளும், அன்றிரவு தேவப்பெருமாளுடனே வார்த்தையாடுமளவில் எம்பெருமானார்க்கு ஸந்தேஹபரிஹாரமாகப் பெற்று வெளியிட்டவை ஆறுவார்த்தைகள் என்று ஸுப்ரஸித்தமாயிருக்கும். அந்த ஆறுவார்த்தைகளின் விவரணம் வருமாறு.

## [முதல் வார்த்தை—அஹமேவ பரம் தத்வம்.]

ஸ்ரீமந்நாராயணனே பரதத்வமென்பது முதல்வார்த்தை. எது ஜகத்காரண வஸ்துவோ அதுவே உபாஸ்யமென்றும் அதுவே முழுமுதற்கடவுள் என்றும் உபநிஷத்துக்களின் கொள்கையாகும். எது ஜகத்காரணவஸ்துவென்று ஆராயப் புகுமளவில், சாந்தோக்ய உபநிஷத்தில் "ஸதேவ ஸோம்ய! இதமக்ர ஆஸீத் ஏகமேவ அத்விதீயம்" என்று **ஸத்** என்ற சப்தத்தாலே மூலப்பொருள் ஓதப்பட்டது. அதனால் ஒரு நிஷ்கர்ஷம் பிறக்க வழியில்லை. மற்றும் உபநிஷத்துக்களை ஆராயுமிடத்தில் வாஜஸநேயகத்தில் "ப்ரஹ்ம வா இதம் ஏகமேவ அக்ரஆஸீத்" என்று ஓதப்பட்டது. முற்காட்டிய உபநிஷத்தில் மூலப்பொருள் **ஸத்** சப்தத்தாலே கூறப்பட்டு; இதில் **ப்ரஹ்ம** சப்தத்தாலே கூறப்பட்டது; அந்த வஸ்து **மிகவும் பெரிது** என்று இதனால் ஏற்பட்டது. இன்னமும் உபநிஷத்துக்களை ஆராயுமளவில் ஐதரேயத்தில் 'ஆத்மா வா அயமேக ஏவாக்ர ஆஸீத்' என்றுள்ளது. இதனால், அந்த மூலப்பொருள் **அறிவுடையது** என்று மாத்திரம் ஏற்பட்டது. இந்திரன் சந்திரன் ஸூர்யன் யமன் வாயு வருணன் குபேரன் சிவன் பிரமன் என்று சொல்லப்படுகின்ற ஆத்மவர்க்கங்களில் ஒவ்வொருதெய்வத்திற்கும் ஸ்ருஜ்யத்வமே சாஸ்த்ரங்களில் கூறப்பட்டிருத்தல் குறிக்கொள்ளத் தக்கது. ஸர்வேச்வரனுடைய ஆஜ்ஞைக்கு அஞ்சி நடப்பாருமாய், அவனை ஆராதித்துப்பதவிகள் பெற்றாருமாய், சாஸ்த்ரங்களின் அநுவர்த்தந-அதிவர்த்தநங்களாலே புண்யபாபங்களைப் பெற்று அவ்வவற்றின் பயனாகிய சுகதுக்கங்களை அநுபவிப்பாருமாய், ஓரளவுபட்ட ஐச்வர்யங்களையுடையவர்களாகச் சொல்லப்படுகையாலே அஸ்மதாதிகளைப்போன்ற, அல்லது நம்மைக்காட்டிலும் சிறிது மேம்பட்டவர்களாகவுள்ள தேவர்கள் ஜகத்காரணபூதர்களாயிருக்கத் தகுதியுடையாரல்லர். * "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்ரஹ்மா நேசாந:" இத்யாதியாகவுள்ள மஹோபநிஷத்வாக்யத்தில் நாராயணனே மூலப்பொருளென்று ஸுஸ்பஷ்டமாக ஓதப்பட்டுள்ளது. முந்துற உதாஹரிக்கப்பட்டுள்ள ச்ருதிவாக்யங்களில் **ஸத் ப்ரஹ்ம ஆத்ம** பதங்களால் விவக்ஷிக்கப்பட்ட வஸ்து நாராயணனே யாகவடுக்கும். ஏன்? ஸர்வசாகாப்ரத்யயந்யாயத்தாலே காரண வாக்யங்களெல்லாவற்றுக்கும் ஏகவிஷயத்வம் வேண்டுகையாலே "**பசுமால**

பேத'' என்று நாற்கால் விலங்குகளையெல்லாம் சொல்லக்கடவதான [ஸாமாந்யமான] பசுசப்தம் ''சாகோ வா மந்த்ரவர்ணாத்'' என்கிற ஸூத்ரத்தின்படி ஆடாகிற பசுவிசேஷத்திலே பர்யவஸிக்குமாபோலே **ஸத் ப்ரஹ்ம ஆத்ம** பதங்கள் நாராயணனாகிற விசேஷத்திலே பர்யவஸித்துநிற்கும். இந்தத் தெளிவைத் தேவப்பெருமாள் * **அஹமேவ பரம் தத்வம்*** என்ற முதல்வார்த்தையினாலுண்டாக்கினர்.

## 2. இரண்டாம் வார்த்தை— தர்சநம் பேத ஏவ ச.

இது நம் விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அந்தரங்கமானதொரு வார்த்தையாகும். உபநிஷத்துக்களில் ''நேஹ நாநாஸ்தி கிஞ்சந* ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம *இத்யாதிகளான வாக்யங்கள் ப்ரஹ்மமொன்றே யுள்ளதென்றும் வேறு
... தெரிவிக்கின்றன. "க்ஷரம் ப்ரதாநம் அம்ருதா
... த்வா ஸுபர்ணா ஸயுஜா* இத்யாதி
... அசித்து ஈச்வரன் என்ற மூன்று
... சங்கராசார்ய ப்ரப்ருதிகள்,
... யமாகக் கொண்டு

கண்ணுறக்கமதாவது" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே மனமொழி மெய் களாகிய கரணத்ரயமும் சிதிலமாகி எம்பெருமானை நினைக்கவும் முடியாதபடி யிருந்து அப்படியே பிராணவியோக மாய்விட்டால் அன்னவர்களுக்கு ஸத்கதி கிடையாதோ? என்று சங்கிக்கவேண்டா; வராஹசரமச்லோகப் படிக்கும் *எய்ப் பென்னைவந்து நலியும்போது அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன் அப்போதைக் கிப்போதே சொல்லிவைத்தேன் அரங்கத்தரவணைப் பள்ளியானே* என்ற அருளிச் செயலின்படிக்கும், யோக்யகாலங்களில் மநோவாக் காயங்களை நல்வழிப்படுத்தின மஹான்களுக்கு சரீராவஸாநகாலத்தில் நல்லஸ்மரணமில்லை யாயினும் குறையில்லை யென்பது இந்த வார்த்தையின் கருத்து. "**அந்திம ஸ்ம்ருதிவர்ஜநம்**" என்றிருப்பதால் அந்திம காலத்தில் ஸ்மரணம் இருக்கவே கூடாதென்று நிஷேதிப்பதாகச் சிலர் பொருள் கொள்ளக்கூடும். அது தவறு; அந்திம காலத்தில் நல்ல ஸ்மரணமில்லையாயின் ...கனுல் ஸத்கதிக்கு ஹாநி யுண்டாகுமோவென்று கவலைப்பட ... விவக்ஷிதம் அந்திமஸ்ம்ருதி நிர்ப்ப...

**5. ஐந்தாவது ...**

செய்த ...

எந்தப் பொருளுமில்லையென்றும்
க்ஷரம் ஹர: க்ஷராத்மாநா வீசதே தேவ ஏக:"
களான உபநிஷத் வாக்யங்களோ வென்னில் சித்து
தத்வங்களும் உள்ளனவென்று தெரிவிக்கின்றன: சங்
முந்துறக் காட்டிய அபேத ச்ருதிவாக்யங்களையே முக்கிய
அத்வைதக்கொள்கையை ப்ரவசனம் செய்தார்கள். அவர்களுடைய
படி உண்மையில் ஒருதத்துவமே உள்ளதென்றும் சேதந-அசேதந-ஈச்வரர்க
தத்வத்ரயம் கிடையாதென்றும் தேறுகிறது. அது தவறு என்று காட்டுவது இந்த வார்த்தை. சேதநாசேதநங்கள் ஈச்வரனுக்கு சரீரங்களாகையாலே உலகத்தில் சரீர சரீரிகளை ஒற்றுமை நயத்தினுற் கூறும் வழக்கில் அபேத ச்ருதிகள் அவதரித்தனவே யல்லது உண்மையில் தனியே மூன்று தத்துவங்கள் இல்லையென்று மறுக்க வந்தவை யல்ல. சரீராத்ம பாவத்தாலே அபேதம் நிர்வஹிக்கப்படுகிறது. ஸம்ஸார தசையோடு முகதி தசையோடு வாசியற எங்கும் பாரமார்த்திகமாகவே ஜீவ பர பேதம் உண்டு—என்று இவ்வார்த்தையினுல் விளக்கிற்றுயிற்று.

### 3. மூன்ருவது வார்த்தை—உபாயேஷு ப்ரபத்திஸ் ஸ்யாத்

பகவத்கீதை முதலியவற்றில் கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் எனப் பல உபாயங்கள் எம்பெருமானைப் பெறுதற்கு வழியாக வகுக்கப் பட்டுள் ளன. ப்ரபத்தி தவிர மற்ற உபாயங்கள் ஆகிஞ்சந்யமும் அநந்யகதித்வமுமே வடி வாகவுள்ள ஸ்ரீ வைஷ்ண வாதிகாரிக்கு ஸ்வரூபவிருத்தங்களாகையாலே ஸ்வரூபஜ்ஞர்களான அதிகாரிகள் அவ்வுபாயங்களை அனுட்டிக்கத் தகுதியுடையரல்லர்; "ப்ராபகாந்தர பரித்யாகத்துக்கு அஜ்ஞாந அசக்திகளன்று, ஸ்வரூப விரோதமே ப்ரதாநஹேது" என்று ஸ்ரீவசந பூஷணத்தில் பிள்ளையுலகாசிரியர் அருளிச்செய்த படிக்கு சரணுகதியே ஸ்வரூபோசிதமான உபாயமென்பது இந்த வார்த்தையின் கருத்து. முமுக்ஷுப்படியில் சரமச்லோக ப்ரகரணத்தின் உபக்ரமத்தில் "கீழே சில உபாய விசேஷங்களை யுபதேசிக்க" என்று தொடங்கி அருளிச்செய்துள்ள சூர்ணையும் இங்கு நோக்கத்தக்கது. இதை நிகமாந்தகுரு பல ஸூக்திகளால் திடப் படுத்தினர்.

### 4. நான்காவது வார்த்தை—அந்திமஸ்ம்ருதி வர்ஜநம்.

ப்ரபந்நாதிகாரிகள் சரீரவியோக மடையுங்காலத்தில் "மடிவழிவந்து நீர்ப் புலன்சோர வாயிலட்டிய கஞ்சியும் மீண்டே; கடைவழிவாரக் கண்டமடைப்பக்

...வேண்டாவென்பது மாத்திரமே இங்கு
...றத வர்ஜனம் என்றபடி.

## ...வார்த்தை—தேஹாவஸாநே முக்திஸ் ஸ்யாத்.

...பாபங்கள் அநுபவிக்கப்பட்டுக் கழிந்தாலல்லது மோக்ஷம் பெற ...ம. பாபங்களோ எத்தனை ஜன்மமெடுத்து அநுபவித்தாலும் இன்னமும் ...மேலும் அவை வளரும்படியாகவுள்ளதேயன்றிக் கழியும்படியாக இல்லையே; " வாயினாற்பாடி மனத்தினால் சிந்திக்கப் போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்" என்கிறபடியே வித்யா மாஹாத்ம்யத்தினால் பாபங்கள் கழிவதாகக் கொண்டால் உடனே மோக்ஷம் கிடைத்துத் தீரவேணுமே; அப்படி கிடைப்பதாகத் தெரியவில்லையேயென்று தோன்றும் சங்கைக்குப் பரிஹாரம் இந்த வார்த்தையினால் கிடைக்கிறது. பாபங்கள் ப்ராரப்தமென்றும ஸஞ்சிதமென்றும் இருவகைப்படும்; பலன் கொடுக்கத் தொடங்கின பாவங்கள் ப்ராரப்தமெனப்படும். இங்ஙனல்லாதவை ஸஞ்சிதமெனப்படும். வித்யா மாஹாத்மியத்தினால் ஸஞ்சித கருமங்கள் தொலையும். ப்ரபந்நாதிகாரிகளுக்கு ப்ராரப்த கர்மாநுபவத்தை இந்த தேஹத்தளவோடே செய்வித்து முடித்து மறுபடியும் தேஹ ஸம்பந்த முண்டாகாதபடி எம்பெருமான் செய்தருள்வனாதலால் " மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்கிறபடியே இந்ததேஹத்தின் அவஸானத்திலே மோக்ஷம் திண்ணம் என்பது இந்த வார்த்தையின் கருத்து. ஆர்த்த ப்ரபந்நனென்றும் த்ருப்த ப்ரபந்நனென்றும் ப்ரபந்நன் இருவகைப்படுவன். வர்த்தமாந தேஹத்தை ஒரு படி பொறுத்திருக்கவல்லவன் த்ருப்த ப்ரபந்நன். இதையும் பொறுத்திருக்க முடியாதபடிஆர்த்தி கனத்தவன் ஆர்த்தப்ரபந்நன். அன்னவனுடைய ஆர்த்திமிகுதியை யறிந்தவாறே எம்பெருமான் அப்போதே முக்தியளிப்பனென்பதும் அறியத்தக்கது,

## 6. ஆறாவது வார்த்தை—பூர்ணாசார்ய ஸமாச்ரய:.

எம்பெருமானார் தாம் எவரை ஆசார்யராகப் பற்றுவதென்று விசார முற்றிருந்தபடியாலே அதற்குப் பரிஹாரம் இந்த ஆறாவது வார்த்தையினாலாகிறது. ஆளவந்தாருடைய சிஷ்யர்களில் தலைவரான பெரியநம்பியை ஆச்ரயிக்கும்படி இதனால் நியமனமாயிற்றென்று அறிவது. "பஞ்சாசார்ய பதாச்ரித:" என்றபடி ஸ்வாமி ராமாநுஜர் ஐந்து ஆசார்யர்களை ஆச்ரயித்தவராயினும், ஸ்ரீவசன பூஷணத்தில் "நேரே ஆசார்யனென்பது ஸம்ஸார நிவர்த்தகமான பெரிய திருமந்த்ரத்தை யுபதேசித்தவனை" என்றருளிச் செய்திருக்கையாலே அப்படிப் பட்ட ஆசார்யர் இவர்க்குப் பெரிய நம்பியே யாவர்.

ஆக ஆறுவார்த்தைகளின் விவரணம் முற்றிற்று.

—(*)—

# கூரத்தாழ்வான்

தைமாத ஹஸ்நக்ஷத்திரத்தில் கூரத்தில் திருவவதரித்தவர் இவ்வாசார்ய ஸார்வ பௌமர்.



இவ்வாசிரியரோடு ஒப்பிடக் கூடிய வர்களும் இவர்க்கு மேம்பட்டவர்களும் முன்னுமவதரித்ததில்லை, பின்னு மவதரிக்கப்போகிறதில்லை. புருஷ குணங்களெல்லாவற்றினுஞ் சிறந்த ஜீவ காருண்யம் ஆசார்யபக்தி பகவத்பக்தி விரக்தி அப்ரதிம பாண்டித்யம் ஸத்கர்மஅநுஷ்டாந நிஷ்டை முதலிய எண்ணில் பல் குணங்கட்குப் பிறப்பிடமிவாரே யென்னவமைந்தவரானவாசிரியரது திருக் குணங்களில் சிலவற்றை இங்கெடுத்து அநுபவிப்போம்.

இவர் தமக்கிருந்த விசேஷ ஸம்பத்துக்களை யெல்லாம் துறந்து, இராமானுசனடிக் கீழ்ப்புகுந்து வாழுங்காலத்திலே, இராமானுசன், திருக்கோட்டியூர்நம்பி திருவடிகளிற் சென்று பரம ப்ரயாஸங்கள்பட்டு சரம ச்லோக பரம ரஹஸ்யார்த்தத்தை உபதேசிக்கப் பெற்று மீண்டு மடத்திற்கு எழுந்தருளினவளவிலே, ஆழ்வான் உடையவர் ஸ்ரீபாதத்திலே தெண்டனிட்டுநிற்க, உடையவரும் 'வாரீர் ஆழ்வான்! சரமச்லோக பரமரஹஸ்யார்த்தத்தை நம்பிகள் எனக்கு உபதேசித்தருளி, இவ்வர்த்த விசேஷத்தை ஒருவர்க்கும் செவிப்படாதபடி பேணிக் கொண்டிருக்குமாறு நியமித்தருளினபோது, பரமபாகவத சிகாமணியான ஆழ்வானுக்கு மாத்திரம் அடியேன் இதனை வெளியிடாதிருக்க முடியாதே' என்று நான் விண்ணப்பஞ் செய்ய, 'ஆழ்வானுக்கு இவ்வர்த்தம் கேட்க அதிகாரமுண்டேயாகிலும் பல்வகையாலும் அவருடைய அத்யவஸாயத்தைப் பரீக்ஷித்தறிந்து ஓராண்டு

சுச்ரூஷைகொண்டு சொல்லும்’ என்று நியமித்தருளினர் —என்று ஆழ்வானை நோக்கி அருளிச் செய்ய’ அது கேட்ட ஆழ்வானும் * மின்னின் நிலையில் மன்னுயிராக்கைகள் * என்ற பாசுரத்தைத் திருவுள்ளம்பற்றி ஒரு ஸம்வத்ஸரம் இவ்வுடலுக்கு நிலையுண்டோ இல்லையோ வென்று வியாகுலப்பட்டு ஆலோசித்து, அவ்வர்த்த விசேஷத்தைப் பெற்றாலல்லது தரித்திருக்க முடியாத பேராசையாலே ஆசார்யனது திருமாளிகை வாசலிலே ஒரு மாஸம் பட்டினி கிடக்கை ஸம்வத்ஸர சுச்ரூஷையோடொக்கும் என்று சாஸ்த்ர முண்டென்றறிந்து அங்ஙனமே மாஸோபவாஸம் கிடந்து அவ்வர்த்தத்தைப் பெற்றார் என்று ப்ரஸித்தம்.

திருவரங்கத்தமுதனார், உடையவர் நியமனப்படி ஆழ்வான் திருவடிகளில் அந்தரங்கராய்க் காலக்ஷேபஞ் செய்து வருகிற நாளிலே அவருடைய தாயார் ஆசாரியன் திருவடியடைய, தசாஹம் கடந்த பின்பு ஏகாஹத்திற்கு நிமந்த்ரணஸ்வாமியாக ஒருவரை நியமித்தருளவேணும் என்று உடையவர் திருவடிகளிலே விண்ணப்பஞ் செய்ய, உடையவரும், ஆழ்வானை நோக்கி ‘நீர் போம்’ என்ன, ஆழ்வானும் சிறிதும் முகம் கன்றாமல் அப்படியே எழுந்தருள, அமுதனாரும் ஆசாரியர் இங்ஙனே எழுந்தருளப் பெறுவதே! என்று தாழ்ந்து தரைப்பட்டு ஸேவித்து ஏகாஹச்ராத்தத்திலே அமுது செய்வித்தார். நம்பெருமாள் ஸந்நிதித் திறவுகோல் அமுதனாருடைய ஆதீனத்திலிருந்தபடியால் அதை உடையவர் உபாயமாகக் கைப்பற்ற விரும்பியே ஆழ்வானை ஏகாஹத்தில் புஜிக்க நியமித்தார்; **ஸகலம் ஸம்பூர்ணம்** சொல்லும் ஸமயத்தில் ஆழ்வான் கோயில் திறவுகோலை நல்விரகாலே ஸ்வீகரித்தருளி, அதைக் கொணர்ந்து உடையவர் திருவடிவாரத்திலே ஸமர்ப்பிக்கலானார். பின்பு ***ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்*** என்று கடல்சூழ்ந்த மண்ணுலகமுற்றும் போற்றும்படி எம்பெருமானார் நம்பெருமாள்ஸந்நிதிக் கைங்கரியங்களைப் பரிஷ்கரித்தருளினர் என்று ப்ரஸித்தம்.

எம்பெருமானார் ப்ரஹ்ம ஸூத்ரத்துக்கு ஸ்ரீ பாஷ்யம் செய்தருளி, ஆளவந்தார் திருவுள்ளக் குறையை நீக்கக் கருதி, அதற்காக போதாயநவ்ருத்திக்ரந்தத்தைக் கடாக்ஷிக்கத் திருவுள்ளமாய் அந்த ஸ்ரீகோசம் காச்மீர மண்டலத்தில் சாரதா பீடத்திலுள்ள தென்றுணர்ந்து ஆழ்வானுடன் அங்கேற எழுந்தருளின வளவில், ஆழ்வான் அந்த வ்ருத்திக்ரந்தத்தை வெகு விரைவில் முழுதும் கடாக்ஷித்து ஹ்ருதயத்திலே தரித்துக் கொண்டார். பிறகு கோயில் வந்து சேர்ந்து உடையவர், ஆழ்வானை உசாத்துணையாகக் கொண்டு ஸ்ரீ பாஷ்ய மருளிச்செய்து தலைக்கட்டினார். உடையவர் அருளிச்செய்த திவ்ய க்ரந்தங்களெல்லாம் ஆழ்வான் பட்டோலை கொண்டவை என்று பெரியோர் கூறுவர். ஸ்ரீ பாஷ்யத்தில் “இதி ஸ்ரீ பகவத்ராமாநுஜவிரசிதே சாரீரக மீமாம்ஸா பாஷ்யே” இத்யாதி வாக்கியங்களை ஸ்ரீ பாஷ்யத்தோடொப்பப் பெரியார் அநுஸந்தித்துவருவது ஆழ்வான் ஸ்ரீ ஸூக்தியென்றேயாம்.

எம்பெருமானார்கோஷ்டியில் உபய வேதாந்த க்ரந்த காலக்ஷேபம் நடவாநிற்க, ‘ஆத்மாவுக்கு ஜ்ஞாத்ருத்வ சேஷத்வங்களில் எது அந்தரங்க நிரூபகம்? என்று ப்ரஸ்தாவம் நிகழ, எம்பெருமானார் ஸர்வஜ்ஞராய் எழுந்தருளியிருக்கச் செய்தேயும் இதன் நிஷ்கர்ஷத்தை ஆசார்ய முகேந வெளியிடுவிக்க வேணுமென்று திருவுள்ளம் பற்றி ஆழ்வானைத் திருக்கோட்டியூர்நம்பி பக்கல் அனுப்ப ஆழ்வானும், நம்பிபக்கல் விடைகொண்டு ஆறு மாஸம் காத்திருந்து ஜ்ஞாத்ருத்வத்திற் காட்டில் சேஷத்வமே அந்தரங்க நிரூபகமென்னும் மஹார்த்தத்தைப் பெற்று வந்தார். இங்ஙனே இப்பேராசிரியரின் மஹா வைபவங்கள் விரிப்பிற் பெருகும். .... *

# பிள்ளை லோகாசார்யர்

தனியன்

லோகாசார்யாய குரவே க்ருஷ்ணபாதஸ்ய ஸூநவே
ஸம்ஸாரபோகிஸந்தஷ்ட ஜீவஜீவாதவே நம:.

ஐப்பசியில் திருவோணத்தன்று அவதரித்த பரமகாருணிகரான இவ்வாசிரியரின் பெருமையைச் சிறிது பேசி மகிழ்வோம். இவருடைய ஜ்ஞாநாநுஷ்டானப் பெருமைகள் ஒரு புறமிருக்க, பரமகருணையின் திறத்தை என்னென்று பகர்வது! ஆசாரியர்கள் பொதுவாக இருவகைப்படுவர்கள்; 1. அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்கள் என்றும் 2. க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்களென்றும். சிஷ்யர்கள் பலகால் துவண்டு வேண்ட அதனாலே அநுக்ரஹிப்பவர்கள் அநுவ்ருத்தி ப்ரஸந்நாசார்யர்களாவர். சிஷ்யப்ரார்த்தனையைச் சிறிதும் எதிர்பாராமல் தம்முடைய இயற்கையின்னருளால் தாமாகக் கனிந்து * பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் செயல் நன்றாகத் திருத்திப் பணிகொள்வான் * என்ற கணக்கிலே தம்பேறாக அநுக்ரஹித்தருள்பவர்கள் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யர்கள். நமது ஆசார்ய கோஷ்டியில் எம்பெருமானார் தாம் க்ருபாமாத்ர ப்ரஸந்நாசார்யரென்ற பட்டத்தை முதன்மையாகப் பெற்றவர். ஆயினும் அவர் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு க்ரந்தமும் அருளிச் செய்தாரல்லர். ப்ரஹ்மஸூத்ரங்களின் அர்த்தங்களை விவரிக்க மூன்று நூல்களையருளிச்செய்தவவர் ரஹஸ்யார்த்த விவரணமாக ஒரு சிறு நூலாவது அருளிச் செய்திருக்கலாம். இன்னுமொரு திருக்கோலம் பூண்டு [அதாவது—மணவாளமாமுனிகளாக அவதரித்து] மிக விரிவாக அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றியிருந்தமையாலே ஸ்ரீராமாநுஜரான அந்த அவதாரந்தன்னிலே ரஹஸ்யார்த்தங்களை ஏடுபடுத்தாமே சென்றனர்; ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் கத்யத்ரயம் முதலிய திவ்ய க்ரந்தங்களில் ஸம்ப்ரதாய ரஹஸ்யார்த்தங்களும் ஆங்காங்குச் சேமிக்கப்பட்டேயிருந்தாலும் அவற்றைக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித் தாராத குறை குறையே. அக்குறை தீரவே ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான இப் பிள்ளையுலகாசிரியர்தாமே முதன்முதலாக ஸ்ரீவைஷ்ணவ மண்டலிக்கு மஹோபகாரஞ் செய்தருளினார். லோகாசார்யரென்கிற திருநாமம் இவர்க்கே தகும். இவ்விருள் தருமாஞாலத்தின் அக்கிருளை அறவேயொழிக்கவல்ல திவ்ய ஸ்ரீஸூக்திகளைத் தேனும் பாலும் நெய்யுங் கன்னலும் அமுதுமாக அளித்தருளினவர் இம்மஹாசார்யர். இவருடைய ஸர்வஜ்ஞத்வமும் பரமகாருணிகத்வமும் பரம ப்ராமாணிகத்வமும் ஒவ்வொன்றும் நெஞ்சால் நினைப்பரிதே. ஒரு அர்த்தத்திலும் ஆக்ரஹமின்றிக்கே ஆசார்யபரம்பராப்ராப்தமான அர்த்தங்களையே அற்புதமாக அமைத்திருக்குமழகு இவருடைய க்ரந்தங்களுக்கே அஸாதாரணச் செல்வமாயிருக்கும். இவரருளிச் செய்த நூல்கள் அஷ்டாதச ரஹஸ்யமென்று ஸுப்ரஸித்தமாயிருக்கும். அவற்றுள் ஒப்பில்லாத திவ்யசாஸ்திரம் ஸ்ரீவசனபூஷணம். .... ... ... ... *

# நிகமாந்த மஹாகுரு

தனியன்

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ,
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதா ஹ்ருதி.

நம் மிராமாநுச தர்சனத்தை வளர்த்தருளின ஆசார்யர்களில் ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரு முதல் ஸ்தானம் பெறுவர். இவர் பல படிகளாலும் ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தைப் பெருமைப் படுத்தினவர். ஸ்ரீபாஷ்யத்திற்குக் காப்பாகப் பல பல் க்ரந்த ரத்தினங்களை யருளிச்செய்தும், ஸ்ரீபாஷ்யத்தைப் பலகால் ப்ரவசநஞ் செய்தருளியும், ஸ்ரீபாஷ்யார்த்த தூஷகர்களைப் பல வாறு கண்டித்தும்; ஸ்ரீபாஷ்யகாரரைப் பல பல ச்லோகங்களால் ஏத்தியும்—இப்படியே தமது வாழ்நாளைக் கழித்தருளின மஹாநுபாவர் இவர். ந்யாயஸித்தாஞ்ஜநம், தத்வ முக்தாகலாபம், ஸர்வார்த்தஸித்தி, அதிகரண ஸாராவளி, தத்வடீகா, சததூஷணீ, தாத்பர்ய சந்த்ரிகை—இத்யாதிகளான பல உத்க்ரந்தங்கள் நமது விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்கு அணி விளக்காக அவதரித்தவை. இவர் முப்பது தடவை ஸ்ரீபாஷ்யப்ரவசநம் செய்தருளினவர் என்பது ஸங்கல்பஸூர்யோதயத்தில் இவர் தாமே பணித்த



ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுரு—ஸ்ரீபெரும்பூதூர்.

*த்ரிம்சத் வாரம் ச்ராவிதசாரீரகபாஷ்ய:* என்ற ச்லோகத்தினால் விளங்கும். ஞானம் அனுட்டானம் வைராக்யம் முதலிய ஸகலகுணங்களிலும் நிகரற்ற இப் பேராசிரியருடைய சரித்திர வரலாறுகளைப்பற்றிச் சுருக்கமாகவும் விரிவாகவும் பல நூல்களை வெளியிட்டிருக்கிறேன். வேதாந்ததேசிகக்ரந்தமாலையைப் பதிப்பித்தேனாகிலும் அது இப்போது துர்லபம். மறுபதிப்புச்செய்ய மிக்க விருப்பமுடையேன். இங்கே ஸேவை ஸாதிக்கிற திருக்கோலம் ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் ஸந்நிதியிலே வெற்றிபெற்று விளங்குவது. நித்யஸ்ரீர் நித்யமங்களம். ... ... *

# மணவாளமாமுனிகள்

ஐப்பசியில் திருமூலத்தன்று அவதரித்தருளின இவ்வாசார்ய ஸார்வபௌமருடைய அமுதிலுமாற்றவினிய பெருமையை இன்று நாம் புதிதாகப் பேசப் போகிறோமோ? எத்தனை தடவை பேசினாலும் *அப்பொழுதைக் கப்பொழுது என்னாராவமுதமே* என்னும்படியாக விருக்கும் இவர் பெருமை. எம்பெருமானார் அவ்வவதாரத்திலே சேஷித்திருந்த காரியங்களை நிறைவேற்றுவதற்கென்றே இங்ஙனேயொரு திருக்கோலம் மீண்டும் பூண்டபடி. பெரும்பாலும் வியாக்கியான க்ரந்த ரத்னங்களை யருள்வதிலேயே இரண்டவதாரத்திலும் முழு நோக்கு. அத்யுக்தி அதிசயோக்தி யென்னும்படியான வசனவ்யக்திகளைக் கனவிலு மறியாமை இரண்டவதாரத்திற்கும் அஸாதாரணமஹிமை மயங்கவைத்தல் வலிந்து கூறல் நலிந்து பொருள் கொள்ள வேண்டுதல் முதலிய குற்றங்களுக்குச் சிறிதும் இடம் தாராமே தெள்ளமுதேனும் திவ்யஸ்ரீஸூக்திகளை அருளுந்திறன் இவ்விரண்டவதாரத்திலேயே கண்டதாகும்.



மணவாளமாமுனிகள் (ஆழ்வார்திருநகரி திருக்கோலம்)

கீழே பிள்ளைலோகாசார்யரைப் பரமகாருணிகரென்று புகழ்ந்தோம். மணவாளமாமுனிகள் திருவவதரியாவிடில் அவருடைய பரமகாருணிகத்வமும் *கன்னவிலுங் காட்டகத்தோர் வல்லிக் கடிமலரின் நன்னறுவாசம் மற்றாரானுமெய்தாமே மன்னும் வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோலாகுமத்தனை. அவ்வாசிரியர் அருளிய அஷ்டாதச ரஹஸ்யங்களுள் தலைசிறந்து விளங்கும் முமுக்ஷுப்படி தத்வத்ரயம் ஸ்ரீவசநபூஷணமென்னும் மூன்று ரஹஸ்யங்களுக்கு இவருடைய வியாக்கியானங்களில்லையேல் இம்மாநாலம் இருள்தருமாஞாலமேயென்னத் தட்டுண்டோ?

மாமுனிகளுக்கு விசதவாக் சிகாமணி யென்றொரு பிருதம் வழங்கிவருகின்றது இதனை முதன் முதலாக அளித்த மஹாநுபாவர் யாரோ அறிகின்றிலோம். மருமமறிந்து அளித்த அந்த விருது இவ்வாசார்ய சிகாமணியொருவர்க்குத்தான் ஏற்கும் நீறுபூத்த நெருப்பு என்ன நின்ற இவ்வாசிரியரின் திருவாக்குப்போல் இவ்வுலகில் இதுகாறும் கண்டதில்லையென்றால் இனிமேலா காணப்போகிறோம். இவருடைய திவ்ய மங்கள விக்ரஹமும் திருவுள்ளமும் ஸத்வ குணமொன்றே வடிவெடுத்ததாயிருந்த தென்பது இவரது திருவாக்குகளில் அக்ஷரந்தோறும் புலப்படாநின்றது. ஸகல சாஸ்த்ரார்த்தங்களையும் வெகு அழகாகத் திருவுள்ளத்திலே யடக்கிக்கொண்டு நாட்பூ அலர்ந்தாற்போலே ஸ்ரீஸூக்திகளை ஏற்றக் குறைவின்றி அமைத்திருக்கிற அழகு என்னே! என்னே!! என்று உள்ளம் குழைகின்றதத்தனை. விமர்சசக்தி, நிருபண நைபுண்யம் என்றிங்ஙனே சொல்லும்படியான திறமையெல்லாம் மிக வியக்கும்படியான முறையில் இவர் தம்முடைய வியாக்கியான ஸ்ரீஸூக்திகளிலே தானுள்ளது.

பல சொல்லி என்? ஸாரமாக வொன்று சொல்லித் தலைக்கட்டுவோம். * அப்திர் லங்கித ஏவ வாநரபடைః......என்று முராரியென்கிற வொரு மஹாகவி சொல்லுகிறார்—வாநரவீரர்கள் கடலைக்கடந்து அப்பால் சென்று விட்டார்களெனினும் கடலின் ஆழத்தை அவர்கள் சிறிதும் அறியகில்லார்கள். கடலினுள்ளே பாதாளம் வரையில் அமிழ்ந்து கிடந்த மந்தர மலைக்கன்றோ அந்த ஆழம் தெரியும்—என்பது இந்த ச்லோகத்தின் கருத்து. ஜ்ஞாதாக்களென்று பேர்படைத்த மற்றவர்களெல்லோரும் வானரமுதலிகளின் ஸ்தானத்திலேயாய் மணவாளமாமுனிகளொருவரே மந்தர மலையின் ஸ்தானத்திலே யெண்ணக்கூடியவராகவுள்ளார். ஆசார்யரென்கிற சொல்லுக்கு மாமுனிகளொருவரே இலக்காமவர் என்றும், ஸூக்தி ஸ்ரீஸூக்தி திவ்யஸூக்தி திவ்ய ஸ்ரீஸூக்தி என்றிங்ஙனே சொல்லும் சொற்களெல்லாம் மாமுனிகளின் திருவாக்கையேதான் இலக்காகக் கொள்ளத்தக்கவை யென்றும் நிஷ்பக்ஷபாதர்களின் ஸித்தாந்தம்.

*செந்தமிழ் வேதியர் சிந்தை தெளிந்து சிறந்து மகிழ்ந்திடவும், சீருல்காரியர் செய்தருள் நற்கலை தேசு பொலிந்திடவும், மந்தமதிப்புவி மானிடர் தங்களை வானி லுயர்த்திடவும், மாசறு ஞானியர் சேரெதிராசர்தம் வாழ்வு முளைத்திடவும், கந்த மலர்ப்பொழில் சூழ் குருகாதிபன் கலைகள் விளங்கிடவும் காரமர்மேனி யரங்கநகர்க் கிறை கண்கள் களித்திடவும் இந்த நிலந்தனில்வந்து உதயஞ்செய்தபரமாசார்ய ரன்றோவிவர். நமது ஆழ்வார்களும் ஆசாரியர்களுமெல்லாரும் ஒருங்கே திரண்டு அவதரித்த அவதாரமான இம் மாமுனிகளின் தனியனையும் வாழித் திருநாமங்களையும் இப் பரதகண்டம் முழுவதும் அநுஸந்தித்து உஜ்ஜீவனம் பெறுகின்றது. ..... *

நேற்று ஐப்பசித் திருமூல நன்னாளில் அடியேன் வெளியிட்ட ஸ்ரீமத் வரவர முனீந்த்ர க்ரந்தமாலை—மணவாளமாமுனிகளின் அருமையான திவ்ய ஸ்ரீஸூக்திகள் கொண்டது உலகம் பரவியுள்ளது. முதல் ஸம்புடத்தின் விலை 25 ரூ. தபால் செலவு 2:25.

திருவத்யயநோத்ஸவ வைபவ தீபிகையின் ஒருபகுதி முற்றிற்று.

ஸ்ரீ:

ஸத்காலக்ஷேபஸபை விருந்தில்

# நூற்றெட்டுத் திருப்பதிப் பாடல் விளக்கம்

நமது ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாயத்திற்கு நிதியான நாலாயிர திவ்யப் பிரபந்தங்கள் திவ்ய தேச மங்களாசாஸன ப்ரதானமாக அவதரித்தவைகளாதலால் அவற்றுள் நூற்றெட்டுத் திருப்பதிகள் மங்களா சாஸனம் பெற்றவையென்று உலகமுழுது முணர்ந்ததே. சோழநாட்டில் 40; பாண்டிநாட்டில் 18; மலைநாட்டில் 13; நடு நாட்டில் 2; தொண்டைநாட்டில் 22; வடநாட்டில் 12; திருநாடு ஆக நூற்றெட்டுத் திருப்பதிகளாம், இவற்றுள் பதிகம் பாடல்பெற்றவையும் துணுக்கைப் பாடல் பெற்றவையுமுண்டாதலால் இத் தலங்களை இன்னின்ன ஆழ்வார்கள் இன்னின்ன விடங்களிலே பாடியுள்ளார்களென்னும் விளக்கம் இங்கே தரப்படுகின்றது. ... *

## சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதுக்கும் பாடல் குறிப்பு.

1. **திருவரங்கம்பெரியகோயில்.** ஆழ்வார்கள் பதின்மரும் ஆண்டாளும் பாடிய தலம் இது. **பொய்கையார்** * ஒன்று மறந்தறியேன் (6), **பூதத்தார்** *மனத்துள்ளான்.... நீளரங்கத்துள்ளான் (28), *பயின்றதரங்கம் (46), *தமருள்ளம் தஞ்சை (70), *திறம் பிற்றினியறிந்தேன் (88). **பேயார்**—*விண்ணகரம் வெஃகா (62), **திருமழிசைப்பிரான்** (நான்முகனில்) * பாலில் கிடந்ததுவும் (3), *அவனென்னையாளி (30), *நாகத்தணைக் குடந்தை (36), * ஆள்பார்த் துழிதருவாய் ...அரங்கனே (60), **திருச்சந்த விருத்தத்தில்** *அரங்கனே தரங்கநீர் (21), *கொண்டை கொண்ட (49) *வெண்டிரைக் கருங்கடல் (50), * சரங்களைத் துரந்து (51), *பொற்றையுற்ற (52), * மோடியோடிலச்சை (53, இலைத்தலை (54), * மன்னுமா மலர்க்கிழத்தி (55) * சுரும்பரங்கு (93), * பொன்னி சூழரங்கமேய (119). **நம்மாழ்வார்**—(திருவிருத்தத்தில்) * தண்ணந் துழாய் வளை .......... திருவரங்கா* (28), (திருவாய்மொழி) * கங்குலும் பகலும் பதிகம் 7—2. **குலசேகராழ்வார்**—பெருமாள் திருமொழி 1, 2, 3. பதிகங்கள். 8—10. *.தேவரையுமசுரரையும் ..............அரங்க நகர் துயின்றவனே. **பெரியாழ்வார்**—2—7—2 *கருவுடை மேகங்....... திருவரங்கத்தே கிடந்தாய் * 2—7—3. *சீமாலிகன்......அணியரங்கத்தே கிடந்தாய் * 2—9—4 * கொண்டல் வண்ணா......கோயிற் பிள்ளாய் * 2—9—11 * வண்டு களித்...........தென்னரங்கன் * 3—3—2 * கன்னி நன்மா.......காவிரித் தென்ன ரங்கம். 4—8 * மாதவத்தோன் முதல் மூன்று பதிகங்கள். **ஆண்டாள்**—நா—தி. 4—1. *தெள்ளியார்.........பள்ளிகொள்ளுமிடத்து * 11. * தாமுகக்கும்—பதிகம். **தொண்டரடிப்பொடிகள்.** திருமாலை 45, திருப்பள்ளியெழுச்சி 10. **திருப்பாணாழ்வார்** * அமலனாதி 10.

**திருமங்கையாழ்வார்.** பெரிய திருமொழி 1—8—2 * பள்ளியாவது.......அரங்கம். 3—7—6 * என் துணையென்று.......அரங்கத்துறையு மின் துணைவன் * 5—4. * உந்திமேல் நான்முகனை * முதலாக ஐந்து பதிகங்கள். 6—6—9. * தாராளன் தண்ணரங்க வாளன் * 7—3—4 * உரங்களாலியன்ற .....அரங்கமாளி. 8—2—7 *தரங்க நீர்.......ஊரரங்கமே யென்பது. 9—9—2 *புனைவளர்......அரங்க நகருள் முனைவனை.* 11—3—7 * கண்ணன் மனத் ......அரங்கமும் பாடோமே,* 11—8—8 *அணியார்.......அரங்கநகரப்பா. திருக்குறுந்தாண்டகம் (7) * இம்மையை.......வியன்

திருவரங்கமேய.* (12) * ஆவியை யரங்கமாலே,* (13) இரும்பனன்றுண்ட நீரும்........ அரங்கமா கோயில்.* (19) * பிண்டியார்.......அரங்கம்.* சிறிய திருமடல் * ஆராமஞ் சூழ்ந்த வரங்கம். * பெரிய திருமடல்.* மன்னுமரங்கத் தெம்மாமணியை * திருநெடுந் தாண்டகம் (10) * பொன்னனாய்-குடபாலானாய் * (11) * பட்டு டுக்கும் ...எம்பெருமான் திருவரங்கமெங்கேயென்னும் *.(12) * நெஞ்சுருகி........ அணியரங்கமாடுதுமோ * (14) * மூளைக் கதிரை........அரங்கமேய வந்தணனை * (18) * கார்வண்ணம்........எம்பெருமான் திருவரங்கம் * (19) * முற்றாராவன ......அணியரங்கமாடுதுமோ * (23) * உள்ளூருஞ் சிந்தை......சேலுகளுந் திருவரங்கம் நம்மூர். (24) *இருகையில் சங்கிவை...... புனலரங்கமூரென்று.* (25) * மின்னிலங்கு திருவுருவும் .....புனலரங்கமூரென்று போயினரே. .... .... .... .... .... .... *

2. உறையூர். (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ-தி. 9—2—5. * கோழியும்*

3. திருத் தஞ்சை. (இருவர் பாடல்) பூதத்தாழ்வார் 70. * தமருள்ளம் தஞ்சை.* திருமங்கை. பெ-தி. 1—1—6. * தஞ்சை மாமணிக் கோயிலே வணங்கி.* 2—5—3 * உடம்புருவின்........தடம் பருகு கருமுகிலைத் தஞ்சைக் கோயில் * 7—3—9 * என் செய்கேன்........தஞ்சையாளியை.*

4. அன்பில். (ஒருவர் பாடல்) திருமழிசை. நான்மு. 36. * நாகத்தணை ....... பேரன்பில்.*

5. கரம்பனூர். (உத்தமர் கோயில்) (ஒருவர் பாடல்.) திருமங். பெ-தி. 5—6—2. * பேரானை........கரம்பனூருத்தமனை.*

6. திருவெள்ளறை. (இருவர் பாடல்). பெரியாழ்வார் திருமொழி 1—5—8 * உன்னையு மொக்கலையில் ...வெள்ளறையாய் * 2—8 * இந்திரனோடு பிரமன் பதிகம். திருமங்கையாழ்வார். பெ-தி. 5—3. * வென்றிமாமழு பதிகம். 10—1—4 * துளக்கமில் சுடரை........வெள்ளறைக் காண்டுமே.* சிறிய திருமடல்—* பேராமருதிறுத்தான் வெள்ளறையே * பெரிய திருமடல் * வெள்ளறையுள் கல்லறைமேல் பொன்னை *

7. புள்ளம்பூதங்குடி. (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ-தி. 5—1. * அறிவதரியான் பதிகம்.

8. திருப்பேர் நகர். (அப்பக் குடத்தான்). நால்வர் பாடல். திருமழிசை நான்மு. 36. * நாகத்தணை ...பேர் அன்பில்.* நம்மாழ்வார். திருவாய் 10—8. * திருமாலிருஞ் சோலைமலை யென்றேன்—பதிகம். பெரியாழ்வார் திருமொழி 2—5—1. * பின்னை மணாளனைப் பேரில் கிடந்தானை * 2—6—2 * கொங்குங்குட..... ...பேரும் * 2-9-4. * கொண்டல் வண்ணா ...திருப்பேர்க் கிடந்த திருநாரணா * திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி 1—5—4 * ஊரான் குடந்தை ......வற்றாவருபுனல் சூழ் பேரான்.* 5—6—2 * பேரானைக் குறுங்குடி. 5—9. *கையிலங்காழிசங்கன்—பதிகம். 7—6—9. * பேரானைக் குடந்தை * 10—1—4 * துளக்கமில்.......பேரில் வணங்கிப்போய் * 10—1—10 * பெற்றமாளியைப் பேரில் மணாளனை.* திருக்குறுந். (17) பேசினார.... பேருளான் பெருமை பேசி,* (19) * பிண்டியார்........கச்சி பேர் மல்லை * சிறிய மடல்,

* மதிள்கச்சியூரகமே பேரகமே.* பெரிய மடல் * பேரில் பிறப்பிலியை *. திருநெடுந். (8) * நீரகத்தாய் ...காவிரியின் தென்பால் மன்னு பேரகத்தாய் * (9) * வங்கத்தால்.... பேராய் * (19) * முற்றுரா....பேர்பாடி.*

9. ஆதனூர் (ஒருவர்பாடல்) திருமங்கை. பெரியமடல். *ஆதனூராண்டளக்கும்*

10. திருவழுந்தூர் (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ-தி. 7—5. * தந்தை காலில் பெருவிலங்கு முதலாக நான்கு பதிகங்கள். 10—1—7. * சூடுந்தலார்........அழுந்தையில் கண்டு.* சிறிய மடல் * சேறை திருவழுந்தூர் * பெரிய மடல். * அள்ளல் வாயன்ன மிரைதேரழுந்தா ரெழுஞ் சுடரை.* திருநெடுந். (15) * கல்லுயர்ந்த ....... அணியழுந்தூர் நின்றுகந்த வம்மான்.* (26) * தேமருவுபொழில்.......அணியழுந்தூர் நின்றானுக்கு.*

11. சிறுபுலியூர் (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ-தி. 7—9. * கள்ளம்மனம்.*

12. திருச்சேறை. (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ-தி. 7—4. * கண்சோர வெங்குருதி=பதிகம். 10—1—6. * வானையாரமுதம்........சேறையில் கண்டு போய்.* சிறிய மடல். * சேறை திருவழுந்தூர் * பெரிய மடல் * மன்னிய தண் சேறை *

13. தலைச்சங்க நாண்மதியம். (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ.தி. 8—9—9. * கண்ணார் கண்ணபுரம்........தலைச் சங்க மேற்றிசையுள் விண்ணோர் நாண் மதியை * பெரிய திருமடல் * நன்னீர்த் தலைச்சங்க நாண் மதியை *

14. திருக்குடந்தை, எழு(வர் பாடல்) பூதத்தார்—70. * தமருள்ளம்........மதிள் குடந்தை யென்பரே.* (97) எங்கள் பெருமான்........குடமூக்கில் * பேயார். (30) * சேர்ந்த திருமால் கடல் குடந்தை.* (62) * விண்ணகரம் வெஃகா......மண்ணகத்த தென்குடந்தை * திருமழிசை. நான்மு. 36. * நாகத்தணைக் குடந்தை.* திருச்சந்த. 56 பாசுரம் முதல் 61 வரை வரிசையாக 6 பாசுரங்கள். நம்மாழ்வார். திருவாய். 5—8. * ஆராவமுதே—பதிகம். 8—2—6. * தொல்லையஞ் சோதி........குடந்தை மாமலர்க்கண் வளர்கின்ற மாலே. 10—9—7. * மடந்தையர் வாழ்த்தலும்........ குடந்தையெங் கோவலன்.* பெரியாழ்வார். திருமொழி 2—6—2. * கொங்குங் குடந்தையும் * 2—6—6 * ஆலத்திலையான்........குடந்தைக் கிடந்தார்க்கு.* 2—7—7 * குடங்களெடுத்து .......குடந்தைக் கிடந்த வெங்கோவே.* ஆண்டாள். நா-தி. 13—2. * பாலாவிலையில்......குடந்தைக் கிடந்த குடமாடி.* திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி. 1—1—2. * ஆவியே யமுதே........குடந்தையே தொழுது * 1—1—7. * இற்பிறப்பறியீர்........குடந்தையே தொழுமின். 1—5—4. * ஊரான் குடந்தையுத்தமன் * 2—4—1. * அன்றாயர் குலக்........திருவாலி குடந்தை * 3—6—5. * வாளாய கண் பனிப்ப........தண் குடந்தை நகராளா * 3—6—8. * குயிலாலும் வளர்பொழில் சூழ் தண் குடந்தை * 5—5—7. * வாராளு மிளங் கொங்கை.......தண் குடந்தை நகராளன் * 6—8—9 * பொங்கேறு நீள் சோதி........குடந்தைக் கிடந்தானை * 10—1 * கிடந்த நம்பி குடந்தை மேவி * 7—3—3 * வந்த நாள் வந்து........குடந் தலைக் கோவினை. 7—6—9 * பேரானைக் குடந்தைப் பெருமானை * 8—9—5 ரயென் மனத்தே.......குடந்தைக் கிடந்துகந்த மைந்தா * 9—2—2 * தோட

விழ் நீலம்......குடந்தைக் கிடந்த * 10—1—6 * வாஜையாரமுதம்........குடந்தைச் சென்று காண்டுமே * 10—10—8 * இங்கே போதுங்கொலோ........குடந்தைக் கிடந்த மால் * 11—3—4 * அறியோமேயென்று........வியன் குடந்தை * 11—6—9 * அண்டத்தின் முகடழுந்த......தண் குடந்தை நகர் பாடி.* திருக்குறுந். (6) * மூவரில் முதல்வனாய........குடந்தை மேய * (14) * காவியை வென்ற......சூழ்புனற் குடந்தை யானை * திருவெழுகூற்றிருக்கைப் பிரபந்தம். சிறிய திருமடலில் * காரார் குடந்தை * பெரிய மடல். * பூங்குடந்தைப் போர்விடையை.* திருநெடுந். (17) * பொங்கார்மெல்.... தண் குடந்தை நகரும் பாடி* (19) * முற்றாராவன........தண்குடந்தை......பொற்றாமரைக் கயம் * (29) * அன்றாயர்........தண்குடந்தைக் கிடந்த மாலை.*

15. திருக்கண்டியூர். (ஒருவர் பாடல்) திருமங்கை. திருக்குறுந். (19) பிண்டியார்...உலகமேத்துங் கண்டியூர் *

16. திருவிண்ணகர். (மூவர் பாடல்) பேயார். (61) * பண்டெல்லாம் வேங்கடம்.... விண்ணகர். (62) * விண்ணகரம் வெஃகா * நம்மாழ்வார். திருவாய்மொழி. 6—3. * நல்குரவும் செல்வும்—பதிகம். திருமங்கையாழ்வார். பெ.தி. 6—1. *வண்டுணு நறுமலர் முதல் மூன்று பதிகங்கள். 10—1—8 * பத்தராவியை...... விண்ணகர்க் காண்டுமே.* சிறிய மடல். *காரார் மணிநிறக் கண்ணனூர் விண்ணகரம்.* பெரிய மடல், * மின்னிடையாள் நாயகனை விண்ணகருள் பொன்மலையை * திருநெடுந். (29) * அன்றாயர்........விண்ணகரம் மருவி நாளும் நின்றானை*

17. திருக்கண்ணபுரம். (ஐவர் பாடல்) நம்மாழ்வார். திருவாய்மொழி 9—10. *மாலை நண்ணி * பதிகம். குலசேகரர் பெருமாள் திருமொழி (8) * மன்னு புகழ்ப் பதிகம். பெரியாழ்வார். திருமொழி. 1—5—8. * உன்னையு மொக்கலையில்...கண்ணபுரத் தமுதே. ஆண்டாள். நாச்சியார் திருமொழி (4—2). * காட்டில் வேங்கடம் கண்ணபுர நகர்.* திருமங்கையாழ்வார். பெரிய திருமொழி எட்டாம் பத்து பூர்த்தியாக பத்து பதிகங்கள். சிறிய திருமடல்—* சீரார் கண்புரம் * பெரிய திருமடல்—* கணபுரத்துப் பொன்மலை போல் நின்றவன் தன் * நான் வணங்குங் கண்ணனைக் கண்ணபுரத்தானை. திருநெடுந்தாண்டகம். (10) * குண்பால்மதயானாய் * (16) * கன்றுமேய்த் தினிதுகந்த காளாய்!........கணபுரத் தென்கனியே * (27) * செங்கால்....திருக்கண்ணபுரம் புக்கு *

18. திருவாலி திருநகரி, (இருவர் பாடல்) குலசேகராழ்வார். பெருமாள் திருமொழி (8—7). * ஆலினிலைப் பாலகனாய்........ஆலிநகர்க் கதிபதியே * திருமங்கையாழ்வார். பெரியதிருமொழி (2—4—1) * அன்றாயர் குலக்கொடியோடு........புனல் நறையூர் திருவாலி குடந்தை.* (3—5) *வந்துனதடியேன் முதலாக மூன்று பதிகங்கள். (4—9—2) * சிந்தை தன்னுள்......அந்தணாலிமாலே * (6—8— ) * மூன்னீரை முன்னாள்........தென்னாலிமேய. (8—9—6) *எஞ்சாவெந் நரகத்து........வயலாலி மைந்தனையே * (8—9—8) * கற்றார் பற்றறுக்கும்........வற்றா நீர்வயல்சூழ் வயலாலி யம்மானை * (10—1—3) * வேலையாலிலை........மாலையாலியில் * (11—7—3) * தாயானைத் தாய........தென்னாலி மேயானை.* (11—8—6) * படை நின்ற........வயலாலி மணாளா. சிறிய திருமடல். * பேராலி தண்கால் * பெரிய திருமடல் * மாமலர் மேலன்ன துயிலு மணி நீர்வயலாலி. திருநெடுந்தாண்டகம். (12) * நெஞ்சுருகி........வய் பூவயலாலிமைந்தா.* (22) * நைவளமொன்றாராயா......இதுவன்றோ எழிலாலி.*

19. திருநாகை (ஒருவர்பாடல்) திருமங்கை பெ.தி. 9—2. * பொன்னிவர் 10.

20. திருநறையூர். (ஒருவர் பாடல்) திருமங்கையாழ்வார் பெரிய திருமொழி. 2—4—1 * அன்றாயர்........நன்றாய புனல் நறையூர்.* (4—9—2) * சிந்தை தன்னுள்.... நறையூர் நின்ற நம்பீ.* 6—3—3 * மானேய் நோக்கு நல்லார் .....திருநறையூர்த் தேனே.* (இனி பதிகங்கள் 10) 6—4 * கண்ணுஞ் சுழன்று முதல் 7—3. * சினவிற் செங்கண் * அளவாக. (7—7—4) * பரனே பஞ்சவன்.......நரனே நாரணனே திருநறையூர் நம்பீ.* (8—2—2) * நீணிலா முற்றத்து.....நன்று நன்று நறை யூரர்க்கே.* (10—1—5) *சுடலையில் .....நறையூர்க்கண்டு * சிறிய திருமடல். *நறையூர் திருப்புலியூர். பெரிய திருமடல். * மன்னுமறையோர் திருநறையூர் மாமலைபோல் தென்னறையூர் மன்னுமணி மாடக்கோயில் * திருநெடுந்தாண்டகம். (16) * கன்று மேய்த்து......விரிபொழில் சூழ் திருநறையூர் நின்றாய்.* (17) * பொங்கார்மெல்...... நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே *

21. நந்திபுரவிண்ணகரம். (ஒருவர்பாடல்) திருமங்கை பெ. தி. (5-10) * தீதறுநிலம்.

22. திருவிந்தளூர். (ஒருவர் பாடல்) திருமங் பெ. தி (4-9)* நும்மைத்தொழு தோம் 10. பெரிய திருமடல் * இந்தளூரந்தணனை.*

23. தில்லைத்திருச்சித்திரகூடம். (இருவர் பாடல்) குலசேகராழ்வார். பெருமாள் திருமொழி (10) * அங்கணெடுமதிள்-பதிகம். திருமங்கையாழ்வார் பெ. தி. 3-2 * ஊன் வாடவுண்ணாது-பதிகம்- 3-3. * வாடமருதிடை-பதிகம். பெரிய திருமடல்—*தென் தில்லைச் சித்திரகூடத் தென்செல்வனை.*

24. காழிச்சீராமவிண்ணகரம் (ஒருவர்பாடல்) திருமங்கை. பெ. தி. 3—4.*ஒருகுறள்.

25. கூடலூர். (ஒருவர் பாடல்) திருமங்கை- 5—2. * தாம்தம் பெருமை—பதிகம்.

26. திருக்கண்ணங்குடி. (ஒருவர் பாடல்) திருமங்கை. பெ. தி. 9-1. * வங்கமா*

27. திருக்கண்ணமங்கை. (ஒருவர் பாடல்) திருமங்கை பெ. தி. 7-6-5. *கஞ்ச னைக் காய்ந்தானைக் கண்ணமங்கையுள் நின்றானை.* (7-10) *பெரும்புறக் கடலை பதிகம் 10-1-1. *ஒரு நல் சுற்றம்........கண்ணமங்கையுள் காண்டுமே. 11-6-7. *மண்ணாடும் விண்ணாடும்........கண்ணளன் கண்ணமங்கை நகராளன்* சிறிய திருமடல் *ஆராமம் சூழ் .......கணமங்கை. *பெரியமடல். *கணமங்கைக் கற்பகத்தை.*

28. கபிஸ்தலம். (ஒருவர் பாடல்) திருமழிசை. நான் முகன் 50. *கூற்றமும் சாரா........ஆற்றங்கரை கிடக்கும் கண்ணன்.*

29. திருவெள்ளியங்குடி. (ஒருவர்பாடல்) திருமங்கை பெ. தி. 4-10. *ஆய்ச்சியர்*

(திருநாங்கூர்த் திருப்பதிகள் பதினொன்று)

(திருமங்கையாழ்வாரொருவரே பாடினர்—ஒவ்வொரு பதிகம்)

30. மணிமாடக்கோயில். பெரிய திருமொழி 3-8. * நந்தாவிளக்கே * பெரிய திருமடலில் *நாங்கூரில் மன்னுமணி மாடக்கோயில் மணாளனை.*

31. வைகுந்த விண்ணகரம். 3—9. *சலங்கொண்ட விரணியனது.

32. அரிமேய விண்ணகரம். 3—10. *திருமடந்தை மண்மடந்தை.
33. திருத்தேவனார் தொகை. 4—1. *போதலர்ந்த பொழிற்சோலை.
34. வண்புருடோத்தமம். 4—2. *கம்பமாகடலடைத்திலங்கைக்குமன்.*
35. செம்பொன் செய்கோயில். 4—3. *பேரணிந்துலகத்தவர்.*
36. திருத்தெற்றியம்பலம். 4—4. *மாற்றரசர் மணிமுடியும்.*
37. திருமணிக்கூடம். 4—5. தூம்புடைப்பனைக்கை வேழம்.*
38. காவளம்பாடி. 4—6. *தாவளந்துலகமுற்றும்.
39. திருவெள்ளக்குளம். 4—7. *கண்ணார்கடல்போல்.*
40. பார்த்தன்பள்ளி. 4—8. கவளயானை கொம்பொசித்த.*

— சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பதுக்கும் ஆழ்வார்பாடல் குறிப்பு முற்றிற்று. —

## பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டுக்குப் பாடல் குறிப்பு

41. திருமாலிருஞ்சோலை (ஐவர் பாடல்.) பூதத்தாழ்வார். 48. *உணர்ந்தாய் மறைநான்கும்...மாயிருஞ்சோலைமலை.* 54, *வெற்பென்றிருஞ்சோலை. *நம்மாழ்வார். திருவாய். 2—10. கிளரொளியிளமை - பதிகம். 3—1. *முடிச்சோதியாய் - பதிகம். (இப்பதிகத்தில் திருமாலிருஞ்சோலை யென்கிற சொல் இல்லையாயினும் இப்பதிகத்திற்கான் நூற்றந்தாதி பாசுரத்தில் *அடிவாரந்தன்னிலழகர் வடிவழகைப்பற்றி....... முற்று மனுபவித்தான் முன்* என்று மணவாள்மாமுனிகளருளிச் செய்திருப்பதும் அதற்கு மூலமாக முன்னோரருளிச் செய்திருப்பது முணர்க. 10—7. *செஞ்சொற் கவிகாள் - பதிகம். 10-8-1. *திருமாலிருஞ் -சோலைமலையென்றேன் * 10-8-6. *திருப்பேர்நகரான். திருமாலிருஞ் * பெரியாழ்வார், திருமொ. 1-5-8. *உன்னையு மொக்கலையில்....சோலைமலைக்கரசே * 3-4-5. *சுற்றிநின்றாயர்........மாலிருஞ்சோலை யெம்மாயற்கு * 4—2. * அலம்பா வெருட்டா - பதிகம் 4—3. * உருப்பிணி நங்கை தன்னை - பதிகம். 5—3. * துக்கச் சுழலையை - பதிகம். ஆண்டாள். நா. தி. 4—1. *தெள்ளியார் பலர்........மாலிருஞ்சோலை மணாளனார்.* 9. *சிந்துரச் செம்பொடி - பதிகம். திருமங்கையாழ்வார். பெ. தி. 1-8 5. *வண்கையான் - இருஞ்சோலைமேவிய வெம்பிரான். 2-7-7. * உளங்கனிந்........மாலிருஞ்சோலைமாயனே. * 4-9 2. *சிந்தைதன்னுள்........சோலை மழகளிறே. * 7-3-6. * எட்டனைப்......திருமாலிருஞ் சோலையங்கட்டியை. 7-9-7. * சேயோங்குதண் திருமாலிருஞ் * 9-2-8. * மஞ்சுயர் மாமதிதீண்ட நீண்ட மாலிருஞ் * 9—8. * முந்துறவுரைக்கேன் பதிகம். 9—9. * மூவரில் முன் பதிகம். 10-1-8. * பத்தராவியை—மாலிருஞ்சோலைத் தொழுது.* 11-2-8. * மஞ்சுறு -மாலிருஞ் * 11-7-9. * தேனொடு வண்டாலுந்திருமாலிருஞ் * திருக்குறுந். * பாயிரும்பரவை - மாயிருஞ்சோலை மேய். சிறியமடல் * சீராரும் மாலிருஞ்சோலை. * பெரியமடல் * தென்னனுயர் பொருப்பும் * மன்னனை மாலிருஞ் * திருநெடுந். 10: * பொன்னனைய் - தென்னனைய்.*

42. திருக்கோட்டியூர். (ஐவர் பாடல்.] பூதத்தார். 46. பயின்றதரங்கம் திருக்கோட்டி. * 87. இன்றவரிசன் .....திருக்கோட்டியெந்தை திறம். * பேயார். 62. விண்ணகரம்..... தென்கோட்டி * திருமழிசை நான்மு. 34. * குறிப்பெனக்குக்

கோட்டியூர் * பெரியாழ்வார் திருப்பல். 11. * அல்வழக்கொன்று மில்லாவணி கோட்டி. * திருமொ. 1-1-1. * வண்ணமா ...கோட்டியூர். 1-1-10. * செந்நெல்.... கோட்டியூர் 2-6-2. * கொங்குங்குடந்தையுங் கோட்டி * 4-4. நாவகாரியம் பதிகம். திருமங்கை. பெ. தி. 7-1-3. * தாரேன்....திருக்கோட்டியூரே 9-10. * எங்களெம் மிறை பதிகம் 10-1-9 * கம்பமா...கோட்டியூர்க்கண்டு. * பெரியமடல். கோட்டியூரன்ன வுருவினரியை *

43. திருமெய்யம் (ஒருவர்பாடல்) திருமங்கை. பெ. தி. 2-5-8. *பெண்ணை ......மெய்யமென்னும் * 3-6-9. * நிலையாளாகின்... திருமெய்யமலையாளா * 5-5-2. கலையாளா....மெய்யமலையாளன். * 6-8-7. * கட்டேறு நீள்...மெய்யமமர்ந்த * 8-2-3. * அருவிசோர்....மெய்யம் வினவி. * 9-2-3. * வேயிருஞ்....மெய்யமணாளர். * 10-1-5. * சுடலையில்....மெய்யத்துள்ளே. * 11-7-5. *மையார்கடலும்....மெய்யமலையானை. * திருக்குறுந். 19. பிண்டியார் - அரங்கம் மெய்யம். * பெரியமடல் * திருமெய்யத்தின்னமுத வெள்ளத்தை *

44. திருப்புல்லாணி (ஒருவர்பாடல்) திருமங்கை. 9-3. தன்னை நைவிக்கிலென் பதிகம். 9-4 * காவார்மடல் பதிகம். பெரியமடல். * புல்லாணித் தென்னன்*

45. திருத்தண்கால். (இருவர்பாடல்.) பூதத்தார். 70. *தமருள்ளம் ..தண்கால்* பெ. தி. 5-6-2. * பேரானை....திருத்தண்காலூரானை. * சிறியமடல் * பேராலி தண்கால். * பெரியமடல் * தண்கால் திறல்வலியை. * திருநெடுந். 17. * பொங்கார்.... ஆங்கே தண்காலும். *

46. திருமோகூர் (இருவர்பாடல்) நம்மாழ்வார். திருவாய். 10-1. * தாளதாமரை பதிகம். திருமங்கை. சிறியமடல். * சீராரும்மாலிருஞ்சோலை திருமோகூர். *

47. திருக்கூடல். [தென்மதுரை.] (ஒருவர்பாடல்.) திருமங்கை. பெ. தி. 9-2-5. * கோழியுங் கூடலும் கோயில்கொண்ட. *

48. ஸ்ரீவில்லிபுத்தூர் (இருவர்பாடல்) பெரியாழ்வார் 2-2-6. * மின்னனைய... இன்னிசைக்கும் வில்லிபுத்தூர். * ஆண்டாள். நா. தி. 5-5. * மென்னடையன்னம் ...வில்லிபுத்தூ ருறைவான்றன். *

49 திருக்குருகூர் (ஒருவர்பாடல்) நம்மாழ். திருவாய். 4-10. ஒன்றுந்தேவு பதிகம்.

50. தொலைவில்லிமங்கலம் (ஒருவர்பாடல்) நம்மாழ். 6-5 * துவளில் பதிகம்.

51. சீரிவரமங்கை (ஒருவர்பாடல்) திருவாய். 5-7. நோற்றநோன்பு பதிகம்.

52. தென்திருப்பேரெயில் (ஒருவர்பாடல்) திருவாய். 7-3. *வெள்ளைச்சுரிபதிகம்.

53. ஸ்ரீவைகுண்டம் (ஒருவர்பாடல்) திருவாய். 9-2-4. புளிங்குடிக் கிடந்து... வைகுந்தத்துள் நின்று. * 9-2-8. * எங்கள்கண்... திருவைகுந்தத்துள்ளாய் *

54. திருப்புளிங்குடி (ஒருவர்பாடல்) திருவாய். 8-3-5. * கொடியார்மாட... புளிங்குடியும். 9-2. * பண்டைநாளாலே பதிகம்.

55. வரகுணமங்கை (ஒருவர்பாடல்) திருவாய். 9-2-4. புளிங்...வரகுண.

56. திருக்குளந்தை (பெருங்குளம்) (ஒருவர்பாடல்) திருவாய். 8-2-4. * கூடச்சென்றேன்....மாடக் கொடிமதிள் தென்குளந்தை. *

57. திருக்குறுங்குடி (நால்வர்பாடல்) திருமழிசை திருச்சந். 62. * கரண்டமாடு... குறுங்குடி நெடுந்தகாய் * நம்மாழ்வார் திருவாய். 1-10 9. * நம்பியைத் தென்குறுங்குடி * 3.9.2. உளனாகவே...குறுங்குடி மெய்ம்மெயே * 5-5. * எங்ஙனேயோ பதிகம். பெரியாழ்வார் 1-5-8. * உன்னையும்....மன்னு குறுங்குடியாய் * திருமங்கை. பெ. தி. 1-6-8. * ஏவினர்....குறுங்குடி நெடுங் * 5-6-2. * பேரானைக் குறுங்குடி * 6-3 3. *மானேய்நோக்குநல்லார்....கோனேகுறுங்குடியுள் *9-.5* தவளவிளம்பிறை பதிகம் 9-6. * அக்கும்புலி பதிகம். பெரியமடல்—* தென்னன் குறுங்குடியுள் * திருநெடுந். 14. முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலை *

58. திருக்கோளூர் (ஒருவர்பாடல்) திருவாய். 6-7. * உண்ணுஞ்சோறுபதிகம். 8-3-5. * கொடியார்மாடக் கோளூரகத்தும் * ..... *

பாண்டிநாட்டுத் திருப்பதிகளின் பாடல் குறிப்பு முற்றிற்று.

---

## மலைநாட்டுத் திருப்பதிகளுக்குப் பாடல் குறிப்பு

59. திருவனந்தபுரம் (ஒருவர்பாடல்) நம்மாழ்வார் திருவாய்மொழி 10-2. * கெடுமிடர் பதிகம்.

60. திருவண்பரிசாரம் (ஒருவர்பாடல்) நம். திருவாய். 8-3, 7. * வருவார் செல்வார் வண்பரிசாரத்திருந்த * இப்பதிக முழுதும் இத்திருப்பதி விஷயமென்பது ஆசார்ய ஹ்ருதயகாரர் திருவுள்ளம்.

61. திருக்காட்கரை (ஒருவர்பாடல்) நம். திருவாய். 9-6 * உருகுமால் பதிகம்.

62. திருமூழிக்களம் (இருவர்பாடல்) நம்மாழ். திருவாய். 9-7. * எங்கானலகங்கழி-பதிகம். திருமங்கை. பெ. தி. 7-1-6. * பனியேய்பரங்.......திருமூழிக்களத்து விளக்கே * பெரியமடல் * மூழிக்களத்து விளக்கினை (வளத்தினை) * திருநெடுந். 10 * * பொன்னாய்....திருமூழிக்களத்தானாய் முதலானாயே. *

63. திருப்புலியூர் (இருவர்பாடல்) நம். திருவாய் 8-9 * கருமாணிக்கமலை 10. திருமங்கை. சிறிய மடல் * பேராலி....திருப்புலியூர். *

64. திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாறு (ஒருவர்பாடல்) நம். திருவாய் 8-4 *வார்கடா* வருவி. பதிகம்.

65. திருநாவாய் (இருவர்பாடல்) நம்மாழ். திருவாய். 9-8 * அறுக்கும் வினை பதிகம். திருமங்கை. பெ. தி. 6-8-3 * தூவாய....நாவாயுளானை * 10-1-9. * கம்பமா களிறு....காண்டும் நாவாயுளே. *

66. திருவல்லவாழ் (இருவர்பாடல்) நம். திருவாய். 5-9 * மானேய்நோக்கு பதிகம். திருமங்கை. பெ. தி. 9-7. * தந்தைதாய் மக்களே பதிகம். பெரிய மடல். * வல்லவாழ்ப்பின்னை மணாளனை *

67. திருவண்வண்டூர் (ஒருவர்பாடல்) நம். திருவாய். 6-1. * வைகல் பூங்கழி*

68. திருவாட்டாறு (ஒருவர்பாடல்) நம். திருவாய். 10-6. * அருள்பெறுவார்பதிகம்

69. திருவித்துவக்கோடு (ஒருவர்பாடல்) குலசேகரர் பெரு.தி. 5 *தருதுயரம் 10

70. திருக்கடித்தானம் (ஒருவர்பாடல்) நம். திருவாய். 8-6. * எல்லியும் காலை 10

71. திருவாறன்விளை (ஒருவர்பாடல்) நம். திருவாய். 7-10* இன்பம் பயக்க பதிகம்.

மலைநாட்டுத் திருப்பதிகளுக்குப் பாடல் குறிப்பு முற்றிற்று.

---

## நடுநாட்டுத்திருப்பதிகளிரண்டுக்குப் பாடல் குறிப்பு.

72. திருவயிந்திரபுரம் (ஒருவர்பாடல்) திருமங்கை பெ. தி. 3—1 *இருந்தண்மா*

73. திருக்கோவலூர் (மூவர் பாடல்) பொய்கை. 77. * வேங்கடமும்........நீள் கோவல் * 86. * நீயுந் திருமகளும்....காமருபூங்கோவல் * பூதத்தார். 70. * தமருள்ளம் தஞ்சை....மாமல்லைகோவல். * திருமங்கை. பெ. தி. 2—4—1. * அன்றாயர்....தடந் திகழ் கோவல்நகர் * 2—10 * மஞ்சாடு வரையேழும்-பதிகம். 5—6—7. * சிந்தனையை....கொந்தணைந்த பொழிற்கோவல் * 7—3—2. * தாய் நினைந்த....மதிட்கோவலிடைகழியாயனை * 7—10—4. * பேய்முலைத்தலை....மாயனை மதிட்கோவலிடைகழி.* சிறியமடல். * சீரார் திருவேங்கடமே திருக்கோவலூரே. *பெரியமடல் * கோவலூர் மன்னுமிடைகழி* திருநெடுந் 6. * அலம்புரிந்த....பொன்விளக்கும் பொய்கை வேலிப் பூங்கோவலூர். 7. * வற்புடைய....பூங்கோவலூர் தொழுதும். * 17. * பொங்கார் ....தண்கோவலூர் பாடியாட * .... ... ... *

நடுநாட்டுத் திருப்பதிப் பாடல் குறிப்பு முற்றிற்று.

---

## தொண்டைநாட்டுத் திருப்பதிகளுக்குப் பாடல் குறிப்பு

74. திருக்கச்சியத்திகிரி (இருவர்பாடல்) பூதத்தாழ்வார். (95) என்னெஞ்சமே யான்—உலகேத்து மாழியா னத்தியூரான்.* (96) * அத்தியூரான் புள்ளையூர்வான் * திருமங்கை. பெ. தி. 2-9-3. * உரந்தரு.......வரந்தரு மாமணிவண்ணனிடம் * (விசேஷக் குறிப்பு) காஞ்சீ என்னும் வடமொழிப் பெயர்க்குத் திரிபான கச்சியென்னுஞ் சொல் நான்முகக்கடவுளாராதித்த இடமான அத்திகிரியையே சொல்லக்கடவதாதலால் கச்சியென வருமிடங்களிலெல்லாம் இத்தலத்திற்கு மங்களாசாஸனமாகவே கொள்ளத்தகும். இதன் விரிவை நமது பிறநூல்களிற் காண்க.

75. அட்டபுயகரம் (இருவர்பாடல்) பேயார். 99. * தொட்டபடை—அட்டபுயகரத்தான் * திருமங்கை. பெ. தி. 1-8-5. * வண்கையா னவுணர்க்கு...எண்கையான் * 2-8 * திரிபுர மூன்றுபதிகம். பெரியமடல். *அட்டபுயகரத்தம்மானேற்றை.*

76. திருத்தண்கா (ஒருவர்பாடல்) திருமங்கை. பெ. தி. 10-1-2. * பொன்னைமாமணியை...யாஞ்சென்று காண்டும் தண்காவிலே. * திருநெடுந். (14) * முளைக்கதிரை ...விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில் *

77. வேளுக்கை (இருவர்பாடல்) பேயார். 26. சிறந்தவென்...வேளுக்கைப் பாடியுமே. * (34) * அன்றிவ்வுலகம்...வேளுக்கை நீணகர்வாய் * (62). * விண்ணகரம் வெஃகா...மாமாட வேளுக்கை. * திருமங்கை. பெரியமடல் * மன்னுமதிட்கச்சி வேளுக்கையாளரியை *

78. பாடகம் (ஐவர்பாடல்) பூதத்தார் 64. * உற்று வணங்கி...பூம்பாடகத்துளிருந்தானை * பேயார். 30. சேர்ந்த திருமால்...வாய்ந்தமறை பாடகம் * 64. * இசைந்த வரவமும்...கச்சியிருந்து திருமழிசை. திருச்சந். 63. * நன்றிருந்து......... குன்றிருந்த மாடநீடு பாடகத்தும். * 64. * நின்றதெந்தை...இருந்ததெந்தை பாடகத்து. * நம்மாழ். திருவாய். 5—10—6. * நின்றவாறும் இருந்தவாறும். * திருமங்கை-

பெ. தி. 6—10—4. * கல்லார்மதிள்....கச்சிநகருள் நச்சிப் பாடகத்துள். * திருநெடுந். 15. *கல்லுயர்ந்த கச்சிமேய களிறு. *

79. நீரகம். (ஒருவர் பாடல்.) திருமங்கை. திருநெடுந். 8. நீரகத்தாய்.

80. நிலாத்திங்கள்துண்டம். (ஒருவர் பாடல்) திருமங்கை, திருநெடுந். 8.

81. ஊரகம். (நால்வர் பாடல்) பேயார். 64. * இசைந்த வரவமும்........கச்சி நின்றது.* திருமழிசை. திருச்சந். 63. * நன்றிருந்து....... ஊரகத்து நின்று. * நம். திருவாய். 5—10—6. நின்றவாறும். திருமங்கை. பெ. தி. 1—5—4 * ஊரான்.* சிறியமடல். *மதிள்கச்சி யூரகமே.* பெரியமடல். * ஊரகத்து என்னவனை. * திருநெடுந். 8. நீரகத்தாய்.......கச்சியூரகத்தாய். 13. * கல்லெடுத்து........கச்சியூரகத்தாய்*

82. திருவெஃகா. (ஐவர் பாடல்) பொய்கை. 77. * வேங்கடமும் .. வெஃகாவும் * பேயார். 26. சிறந்தவென்...வெஃகாவும். * 34. * அன்றிவ்வுலகம் ...கிடந்தானை. * 62 * விண்ணகரம் வெஃகா. * 64. * இசைந்த வரவமும் ...கச்சிவெஃகாவில் * 76. * பொருப்பிடையே....விருப்புடைய வெஃகாவே. * திருமழிசை திருச்சந். 63. * நன்றிருந்து........வெஃகணைக்கிடந்தது.* 64. நின்றதெந்தை ......வெஃகணைக்கிடந்தது. * நான்முகன். 36. * நாகத்தணை ...வெஃகா. * நம். திருவிரு. 26. நானிலம்....கண்ணன் வெஃகாவுது. * திருவாய். 5—10—6. * நின்றவாறும்...கிடந்தவாறும் * திருமங்கை பெ. தி. 2—6—5. * பிச்சச்சிறு...கச்சிக்கிடந்தவன். * 10—1—7. * கூந்தலார்....... சென்று காண்டும் வெஃகாவுளே. * சிறியமடல். * பேராமருது .......வெஃகாவே. * பெரியமடல் * வெகஃாவிலுன்னிய யோகத்துறக்கத்தை. * திருநெடுந். 8. * நீரகத்தாய்....வெஃகாவுள்ளாய். * 9. * வங்கத்தால்...மதிட்கச்சியூராய். * 13. * கல்லெடுத்து. வெஃகாவில் துயிலமர்ந்த * 14. * முளைக்கதிரை...வெஃகாவில் திருமாலை.

83. காரகம். (ஒருவர் பாடல்) திருமங்கை. திருநெடுந். 8. * காரகத்தாய்......

84. கார்வானம். (ஒருவர் பாடல்) திருமங். திருநெ. 8. * கார்வானத்துள்ளாய் *

85. கள்வனூர். (ஒருவர் பாடல்) திருமங். திருநெ, 8 * நீரகத்....கள்வா. *

86. பவளவண்ணம். (ஒருவர் பாடல்) திருமங். திருநெ. 9. பவளவண்ணா.

87. பரமேச்சுர விண்ணகரம். (ஒருவர் பாடல்) திருமங். பெ. தி. 2—9. பதிகம்.

88. திருப்புட்குழி. (ஒருவர் பாடல்) திருமங். பெ. தி. 2—7—8. * அலங்கெழு ... புட்குழிபாடும். * பெரிய மடல். * புட்குழியெம் போரேற்றை. *

89. திருநின்றவூர். (ஒருவர் பாடல்) திருமங் பெ. தி. 2—5—2. * பூண்டவத்தம்....நின்றவூர் நித்திலத்தை. * 7—10—5. * ஏற்றினை யிமயத்துள்....நின்றவூர் நின்ற*

90. திருவெவ்வுள். (இருவர் பாடல்) திருமழிசை. நான்மு. 35. * நாகத்தணை.... திருவெவ்வுள். * திருமங். பெ. தி. 2—2. * காசையாடை - பதிகம். பெரியமடல். * * என்னுடைய வின்னமுதை யெவ்வுள் பெருமலையை. *

91. திருநீர்மலை. (இருவர் பாடல்) பூதத்தார். 46. * பயின்றதரங்கம்....அணி நீர்மலையே. * திருமங். பெ. தி. 2—4. * அன்றாயர் - பதிகம். 2—7—8. * அலங்கெழு.... போதுமோ நீர்மலைக்கு * 5—2—8. * கலைவாழ் .. திருநீர்மலை வாழெந்தை. * 6—8—4. * ஓடாவரியாய்....திருநீர்மலையானை. * 7—1—7. * கதியேலில்லை....திருநீர்மலை நித்திலத் தொத்தே. * 8—2—3. * அருவிசோர்....நீர்மலையென்று. * 9—2—8. *மஞ்சுயர் மாமதி

நீண்ட....நீர்மலையார்கொல். * 10—1—1 * ஒருநல்... நீர்மலை யின்றுபோய். * சிறிய மடல். * ஏரார்பொழில்... நீர்மலை. * பெரியமடல். * நீர்மலைமேல் * திருநெடுந். 18. * கார்வண்ணம்....நீர்வண்ணன் னீர்மலைக்கே. *

92. திருவிடவெந்தை. (ஒருவர் பாடல்) திருமங். பெ. தி. 1—8—4. *பார்த்தற்கா யன்று....இடவெந்தை மேவிய வெம்பிரான். * 2—7. * திவளும்வெண்மதி - பதிகம். சிறியமடல். * ஏரார்பொழில் சூழிடவெந்தை. * பெரியமடல். * இட வெந்தையீசனை.*

93. திருக்கடன்மல்லை. (இருவர் பாடல்) பூதத்தார். 70. * தமருள்ளம் தஞ்சை.... மாமல்லை. * திருமங் பெ. தி. 2—5. * பாராயதுண்டு - பதிகம். 2—6. * நண்ணாதவாள் - பதிகம். 3—5—8 * சங்குதங்கு தடங்கடல் கடன்மல்லையுள் கிடந்தாய். * 7—1—4. * புள்வாய் பிளந்த...கடன்மல்லைக்கிடந்த கரும்பே. * திருக்குறு, 19. *பிண்டியார்... மல்லையென்று மண்டினார். * சிறியமடல். * காரார் குடந்தை கடிகைகடன்மல்லை. * பெரியமடல். * மன்னுங் கடன் மல்லை மாயவனை. * திருநெடு. 9. * முந்நீர் மல்லையாய்.*

94. திருவல்லிக்கேணி. (மூவர் பாடல்) பேயார். 16. * வந்துதைத்த ...திருவல்லிக் கேணி யான் சென்று.*திருமழிசை. நான்மு. 35.* தாளாலுலகம் ...மாமயிலை மாவல்லிக் கேணியான் * திருமங்கை. பெ. தி. 2—3. * விற்பெரு விழவும் - பதிகம்.

95. திருக்கடிகை. (இருவர் பாடல்) பேயார். 61. * பண்டெல்லாம்...வண்பூங் கடிகை * திருமங்' பெ. தி. 3—9—4; * மிக்கானை....தக்கானைக் கடிகை. * 8—9—9. * கண்ணார் கண்ணபுரம் கடிகை. * சிறியமடல். * காரார் குடந்தை கடிகை. *

தொண்டை நாட்டுத் திருப்பதிகட்குப் பாடல் குறிப்பு முற்றிற்று.

---

## வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டுக்கும் பாடல் குறிப்பு (சுருக்கமாக)

96. திருவேங்கடம். தொண்டரடிப்பொடியாழ்வா ரொருவர் நீங்கலாக மற்ற ஒன்பது ஆழ்வார்களாலும் ஆண்டாளாலும் பாடப்பெற்றது. பதிகம் பாடினவர்கள் நம்மாழ்வார் (இரண்டு பதிகங்கள்), குலசேகராழ்வார் ஒரு பதிகம். திருமங்கை நான்குபதிகம்.

97. சிங்கவேழ்குன்றம். (ஒருவர்பாடல்.) திருமங்கை - பெ. தி. 1-7. பதிகம்.
98. அயோத்தி. (இருவர்பாடல்) பெரியாழ்வார், குலசேகராழ்வார்.
99. நைமிசாரணியம். (ஒருவர்பாடல்) திருமங்கையாழ்வார் பதிகம் 1. (வாணிலா.)
100. சாளக்கிராமம். (இருவர்பாடல்) பெரியாழ்வார்-துணுக்கை. திருமங்கை 10.
101. வதரியாச்சிரமம், (இருவர்பாடல்) பெரியாழ்வார்-துணுக்கை. திருமங்கை 20.
102. கண்டமென்னுங் கடிநகர் (ஒருவர்பாடல்) பெரியாழ்வார் - பதிகம் 1. (4-7.)
103. பிருதி. (ஒருவர்பாடல்) திருமங்கை பதிகம் 1. வாலிமாவலத்து. (1-2.)
104. வடமதுரை. (மூவர்பாடல்) நம்மாழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள்.
105. துவாரகை. (இருவர்பாடல்) பெரியாழ்வார், ஆண்டாள்.
106. திருவாய்ப்பாடி. பெரியாழ்வார், ஆண்டாள்.
107. திருப்பாற்கடல் (விருந்தாவனமுமாம்.) 108. திருநாடு.

வடநாட்டுத் திருப்பதிகளின் பாடல் குறிப்பு முற்றிற்று.

---



திருவெள்ளக்குளத்து அண்ணன் பெருமாள்

## மார்கழி நீராட்டத்தின் மருமம்

திருப்பாவையில் முதற்பாட்டில் *நீராடப்போதுவீர் போதுமினோ* என்றும் மூன்றாம்பாட்டில் *நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்* என்றும், நாலாம் பாட்டில் * நாங்களும் மார்கழிநீராட மகிழ்ந்து * என்றும், இருபதாம்பாட்டில் *நப்பின்னை நங்காய்!...இப்போதே யெம்மை நீராட்டு * என்றும், இருபத்தாரும் பாட்டில் *மார்கழி நீராடுவான்* என்றும் இங்ஙனே பலகால் நீராட்ட ப்ரஸ்தாவம் நிகழ்ந்துள்ளது. மார்கழி நீராட்ட மஹோத்ஸவமென்று ஆங்காங்கு உத்ஸவமும் நடத்தப்பட்டு வருகின்றது. ஆண்டாள் திருவவதாரஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆண்டாளை நீர்நிலையருகில் எழுந்தருளச்செய்து நடத்தப்படுகிறது. ஆனால் திருப்பாவையில் * நீராடப்போதுவீர் போதுமினோ * என்றழைத்தவர்கள் நீராடுமிடமான நீர்நிலைக்குச் செல்லவில்லையே; தாங்கள் நீராடினதாகவும் சொல்லவில்லையே; இதன் மருமமென்ன? என்று பலர் கேட்பதுண்டு. நாலாம் பாட்டில் *ஆழிமழைக்கண்ணா வென்று மழைத்தெய்வமான மேகத்தை விளித்து *நாங்களும் மகிழ்ந்து மார்கழி

நீராட உலகினிற் பெய்திடாயென்று நியமித்திருப்பதை நோக்குங்கால் மெய்யாகவே நீரிலே தோய்வதை உத்தேசித்திருப்பதாக ஸ்பஷ்டமாகிறதே; மேலே அந்த அநுட்டானம் செய்ததாகத் தெரியவில்லையே யென்று சங்கிப்பதற்கு ஆஸ்பத முள்ளதுதானே.

நம்முடைய பூர்வாசார்ய வியாக்கியானங்களில் இந்த சங்கை பரிஹாரமடையும் படியாக அருளிச் செய்யப்பட்டுள்ளது. * நீராடப் போதுவீர்! * என்றவிடத்து மூவாயிரப்படியில் பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி வருமாறு—" [நீராட] இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ண ஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாட லென்றார்கள். * ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம் * என்று பகவத் ஸம்ச்லேஷத்துக்கு க்ரீஷ்மகாலத்தில் குளிர்ந்த மடுவில்படிவதை த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்றிறே" என்று. ஆறாயிரப்படி ஸ்ரீஸூக்தியும் காணீர்; "[நீராட] இவர்கள் தங்களுக்கு நீராடவென்று நோயாசையிறே. யமுனா ஜலம் ஒருத்தியுடைய விரஹாக்நியாலே சுவறுமே. தமிழர் கலவியைச் சுனையாட லென்றாய்த்துச் சொல்லுவது. க்ருஷ்ணஸம்ச்லேஷத்தையாய்த்து இவர்கள் நீராட வென்கிறது. *ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்* என்னுமாப் போலே" என்று. ஆக விவற்றால், பகவானிடத்தில் அவகாஹிப்பதுதான் நீராட்ட மாக மறைத்துச் சொல்லப்பட்டதென்று விளங்கும்.

முகுந்தமாலையில் *கரசரணஸரோஜே காந்திமந்நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசி வ்யாகுலே அகாதமார்க்கே, ஹரிஸரஸி விகாஹ்யாபீய தேஜோஜலௌகம் பவமரு பரிகிந்ந: கேதமத்ய த்யஜாமி* என்கிற சுலோகத்தை நன்கு சிந்தனை செய்வது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் (8-5-1) *மாயக்கூத்தா.. கண்ணும் கண்கைகால் தூய செய்ய மலர்களா சோதிச் செவ்வாய் முகிழதா, சாயல் சாமத்திருமேனி தண்பா சடையா, தாமரைநீள் வாசத்தடம்போல் வருவானே!* என்றும், *வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதகமணித் தடம்* என்றும் எம்பெருமானைத் தடாகமாகவே பேசினர். ஸ்ரீரங்கராஜஸ்தவமருளிச் செய்துகொண்டே (திருக்கோட்டி யூரிலிருந்து) திருவரங்கம் பெரிய கோயிலில் புகுகின்ற பட்டர் ஐம்பதறுபது சுலோ கங்களினால் திருக்காவேரியையும் திருச்சோலைகளையும் திருமதிள்களையும் திருவீதிகளை யும் திருமண்டபங்களையும் சந்திரபுஷ்கரிணி திருப்புன்னை முதலானவைகளையும் அநுபவித்து, ஸ்ரீரங்கநாதன் திருமுன்பே வந்தவாறே *பிப நயந புரஸ் தே ரங்கதுர் யாபிதாநம் ஸ்திதமிவ பரிபுல்லத் புண்டரீகம் தடாகம்* என்றும், *உத்புல்ல பங்கஜ தடாக மிவோபயாமி ஸ்ரீரங்கராஜமிஹ* என்றும் ஒரு தாமரைத் தடாகத்திலே படிவதாகப் பணித்தாரேயன்றி ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்கின்றேனென்றாரல்லர். ஆகவே திருப்பாவையில் நீராட்ட ப்ரஸ்தாவம் நிகழ்ந்ததானது பகவதவகாஹனத் தையே சொன்னபடியாம். இதுமட்டுமன்று; (திருவிருத்தத்தில்) *காலை நன் ஞானத் துறை படிந்தாடிக் கண்போது செய்து * என்றருளிச்செய்தபடியே ஞானத்துறையாகிய ஆசாரியர்களிடத்தும் படிந்து குடைந்தாடுவதையும் சொன்னபடியாகும். இதற்குச் சேருமாறு ஸ்வாபதேசார்த்தங்களை விளக்குதற்குப்பாங்காகவன்றோ(திருப்பாவையில்) ஸ்ரீஸூக்திகள் தொடையுண்டு திகழ்கின்றன. இந்த விளக்கத்தை அடியேனுடைய

திருப்பார்வையுரைகள் பலவற்றிலும் ரஸிகர்கள் அநுபவிக்கலாம், அநுபவித்து வருகிறார்கள். அவ்வுரைகள் உலகம் பரந்தவை.

இக்கட்டுரையின் தலைப்பில் திருவெள்ளக் குளத்து அண்ணன் பெருமாள் திருக்கோலத்தைத் திசாமவைத்ததன் காரணத்தை நிரூபித்து இக் கட்டுரையைத் தலைக்கட்டுகின்றேன். பிள்ளைப் பெருமாளையங்கார் நூற்றெட்டுத் திருப்பதிகளுக்கும் நூற்றெட்டு வெண்பாக்களிட்டு * நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி யென்னும் பிரபந்தம் பாடியுள்ளார். அதில், திருநாங்கூர்த் திருப்பதிகள் பதினொன்றில் ஒன்றான திருவெள்ளக் குளத்திற்கு இட்ட வெண்பா வருமாறு;—

"நானடிமை செய்யவிடாய் நானுனெனெம்பெருமான் *
தானடிமை கொள்ளவிடாய் தானுன் *— ஆனதற்பின்
வெள்ளக்குளத்தே விடாயிருவரும் தணிந்தோம் *
உள்ளக் குளத்தேனை யொத்து." என்பதாம்.

(இப்பாட்டின் கருத்துச் சுருக்கம்.) எம்பெருமானுக்கு அடிமை செய்யவேணுமென்கிற விடாய் நமக்கிருப்பதுபோல, நம்மை அடிமைகொள்ள வேணுமென்னும் விடாய் அவனுக்குமுள்ளது இருவருடைய விடாயும் தீரவேணும். என்னபண்ணினுல் விடாய் தீரும், குளத்திலே படிந்தால் தீரும். சேறும் கயலும் சேறும் பாசியும் மலிந்த குளத்திலே படிந்து தீரும் விடாயன்று இது. இந்த விடாய் தீருகைக்குத் திருவெள்ளக் குளமென்று ஒரு விலக்ஷணமான குளமுண்டாயிற்று. இதிலே அவன் நித்ய ஸந்நிதிபண்ணி ஸம்ஸாரிகளை அடிமைகொண்டு தன் விடாய் தீரப்பெறுகிறான். நாமும் இங்கே அடிமைசெய்து நம்விடாய் தீரப் பெறுகிறோம். திருவெள்ளக்குளமென்று ஊர்க்கும் பெயர். பெருமாளுக்கும் பெயர். அத்தலத்தில் விளங்கும் திருக்குளத்திற்கும் திருநாமம். ஆக, ஹரிஸரஸி விகாஹனமே நீராட்டமென்றதாயிற்று. (இந்த வெண்பாவில் ஈற்றடியில் குளம் என்றது-சர்க்கரைப்பாகுக்கு வாசகமான குடமென்கிற வடசொல் விகாரம்.) .... .... *

## திருவரங்கம் பெரியகோயிலில் அரையர் ஸேவையின் அடைவு

ப்ரஸ்துதமான திருவத்யய னோத்ஸவமானது நம்பெருமாள் ஸந்நிதியில் விசேஷவைபவம் பெற்றுவருவது அரையர் ஸேவையினுலென்பதை நேரில் ஸேவித்தவர்களின் நெஞ்சு உணரும். பகற்பத்து மஹோத்ஸவம் 10 நாளும் ஸந்நிதிக்குள்ளிருக்கும் அர்ஜுன மண்டபமென்கிற சீரிய திருமண்டபத்தில் ஆழ்வாராசாரியர்கள் திருவோலக்கமிருக்க நடைபெறுவது. இராப்பத்து பத்துநாளும் ஆயிரக்கால் மண்டபத்திலே நடைபெறுவது பகற்பத்துத் தொடக்கத்திற்கு முதல் நாளிரவு பெரிய பெருமாளுடைய ஆஸ்தானத்தில் திருநெடுந்தாண்டகம் அரையர் ஸேவை

இராப்பத்துக்கு மறுநாள் பெரிய பெருமாளுடைய ஆஸ்தானத்திலேயே இயற்பா ஆயிரம் அமுதனார்ஸேவை. முதல்நாள் திருநெடுந்தாண்டக ஸேவை எதற்காகவென்னில்; இதுபற்றி பட்டர்காலத்திலேற்பட்ட வரலாற்றை விளக்கக்கேளீர். மேல்நாட்டில் மாதவாசார்ய ரென்கிற வேதாந்தி அத்வைத ஸம்ப்ரதாய ஸ்தராயிருந்தார். அவரைத் திருத்திப் பணிகொள்ள வேணுமென்று எம்பெருமானார் சரமதசையில் பட்டர்க்கு நியமித்திருந்தார். அந்தக் கட்டளையை நிறைவேற்றுவதற்கு பட்டர் ஸமயம் பார்த்திருந்து மேல்நாட்டுக்கு எழுந்தருளவேண்டியிருந்தது. ஐப்பசி மாதமுடிவில் எழுந்தருள நேர்ந்தது. வேதாந்திகளோடே வாதம் புரிந்து அவரைத் திருத்திப்பணி கொண்டாயிற்று முக்கியமாகத் திருநெடுந்தாண்டக திவ்யப்பிரபந்தத்தின் திவ்யார்த்தங்களைப் பொழிந்தே திருத்தியருளினதாக ப்ரபாவ நூல்களிலுள்ளது. காரியம் தலைக்கட்டினவாறே திருவரங்கம் பெரிய கோயிலுக்குத் திரும்பி யெழுந்தருள வேண்டியதுதானே. அப்போது அத்யயநோத்ஸவம் ஸமீபித்திருந்தது. அதற்குச் சென்று சேரவேணுமென்று பாரித்துக் கனவேகமாக மீண்டெழுந்தருளுகையில் பகற்பத்துத் தொடக்கத்திற்கு முதல் நாள் (அமாவாஸ்யையன்று) கோயில் சேர்ந்தாயிற்று. அன்று மாலை பெருமாளைத் திருவடித் தொழ ஸன்னிதிக் கெழுந்தருளினபோது பெருமாள் அர்ச்சகமுகேந 'விடை பெற்றுப் போன காரியம் தலைக்கட்டிற்றா? எங்ஙனே தலைக்கட்டிற்று?' என்று வினவியருள, பட்டர் 'இங்ஙனே தலைக்கட்டிற்று' என்று திருநெடுந்தாண்டகத்தின் முதற்பதிகத்தைப் பெரிய திருவோலக்கத்திலே பரக்க வுபந்யஸித்தருளினார். அதனை ஆண்டுதோறும் திருச்செவிசாற்றியருளத் திருவரங்கேசன் திருவுள்ளம் பற்றியருள, அவ்வண்ணமாகவே நடைபெற்று வருகின்றது. ஆனால் இந்த ஸன்னிதியில் அருளிச் செயல் ஸேவை அரையர்களின் ஆட்சியிலுள்ளதாதலால் பட்டர் இக் கைங்கரியத்தை அரையர்களுக்கே ஒப்படைத்தார். அந்நாள் தொடங்கி அரையர் ஸேவையாகவே இது நடந்து வருகின்றது. இதுதான் திருநெடுந்தாண்டக ஸேவைக்கு நிதானம்.

முந்துற முன்னம் அரையர்கள் பெரிய பெருமாளுடைய மூலஸ்தானத்திற் கெழுந்தருளி அங்கே அருளிப்பாடும் வரிசைகளும் பெற்று தேவ கானத்திலே முதற் பாசுரத்தைத் தாளத்துடனே அநுஸந்தித்து விடைபெற்று வெளியேபோந்து திருநெடுந்தாண்டக ஸேவையைத் தொடங்குகிறார்கள். முதற் பாட்டுக்கு அபிநயமும் வியாக்கியானமும் ஸேவித்து, இடையிடையிற் சில பாசுரங்களுக்குத் தம்பிரான்படி ஸேவித்துப் பத்துப் பாசுரத்தளவில் நிறுத்திவிடுவர்கள். இதுவே திருநெடுந்தாண்டக ஸேவை. அன்று பக்தர்களின் குதூஹலம் வாசாமகோசரம்.

மறுநாள் முதலாக [பிரதமை முதல் தசமியளவாக] பகற்பத்து எனப்படும். நாள்தோறும் காலை ஏழரை மணிக்கு நம்பெருமாள் மூலஸ்தானத்திலிருந்து புறப்பாடு கண்டருள்வர். ஏழரையென்றால் ஏழரைதான். 7—29. அல்ல. 7—31. அல்ல. ஸ்தானிகர் ஸ்ரீபாதம் தாங்குவாரான ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமிகளுக்கு அருள்பாடிடுவதும், கிழக்கிலும் மேற்கிலுமாக ப்ரபன்னபாகையுடன் நிற்குமந்த ஸ்ரீ பாதத்தவர்கள் நாயிந்தே! என்று முழங்குவதும், உடனே அவர்கள் உள்ளே சென்று பெருமாளை யெழுந்தருளப்பண்ணிப் புறப்பட, திருத்திரை நீக்க அருள்பாடிடுவதும், வலமாகத்

திரும்பிப் படியடியில் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் பட்டர் அண்ணன் முதலான ஆசார்ய புருஷர்களுக்கு விலக்ஷணமான மரியாதை ப்ரஸாதிப்பதும், அரையர் கானத்துடனும் அந்தரங்க பக்த கிங்கரரின் கர்ணாமிருதமான விருது பொலிந்த எச்சரிக்கை முழக்கத்துடனும் * விண்ணின் மீதமரர்கள் விரும்பித்தொழ அர்ஜுன மண்டபம் நோக்கி யெழுந்தருள்வதும் விண்ணுளார்க்கும் கிடைப்பரிய மண்ணுளாரின் மஹாபாக்ய மென்னு மத்தனை. ஆழ்வார்களுமாசாரியர்களும் முன்னடியே மண்டபம் சேர்ந்து நம்பெருமாள் வரவை நோக்கியிருப்பர்கள். பராங்குச பரகால யதிவரர்கள் மூவருமே ஸ்ரீரங்கநாதனுடைய தனிச்சிறப்பைப் பெற நின்றபடியே யிருந்து பெற்றபின் வீற்றிருப்பர்கள். ஆழ்வார்களுக் கெல்லாம் மரியாதையாகி அரையர்களுக்கும் அருளிப்பாடாகி—ஒன்பது மணிக்கு ஸேவை தொடக்கமாகும்.

1. **முதல் நாள்.** திருப்பல்லாண்டு தொடங்கி பெரியாழ்வார் திருமொழி-இரண்டாம் பத்து - ஒன்பதாந் திருமொழி யளவும் ஸேவை நான்கு மணி காலம் நடைபெறும். திருப்பல்லாண்டு முதலிரண்டு பாட்டுக்களுக்கு அபிநயமும் வியாக்கியான ஸேவையுமாகும். பிறகு திருவாராதனமும் கோஷ்டி விநியோகமுமாகி, ஆழ்வாராசாரியர்கள் புறப்பாடு கண்டருளி ஸ்தோத்ரபாட கோஷ்டியுடன் எழுந்தருள்வர்கள். முன்னம் •நம்மாழ்வார் தமது ஸன்னிதிக்குள் எழுந்தருள, ஸன்னிதிவாசலில் காத்திருக்கும் மற்றை யாழ்வாராசாரியர்களுக்கு நம்மாழ்வாருடைய ஸ்ரீ பாதுகையான ராமாநுஜன் ஸாதிக்கப்படுகிற அதிசயம் அநுபவிக்கத்தக்கது. நம்மாழ்வார்க்கு ஜ்யேஷ்டர்களான முதலாழ்வார்களும் திருமழிசைப் பிரானுங்கூட அந்த ஸ்ரீ பாதுகை ஸாதிக்கப் பெறுவர்கள். இதனால் நம்மாழ்வாருடைய அவயவித்வமும் மற்றையோருடைய அவயவத்வமும் விளக்க முற்றதாகும். இவ்வதிசயம் திருவரங்கம் பெரிய கோயிலுக்கு அஸாதாரணமானது. பிறகு அவ்வவ ஆழ்வார்களும் ஆசாரியர்களும் தம் தம் ஸன்னிதிசேர, முடிவாக எம்பெருமானார் ஸன்னிதியில் ஸ்தோத்ர பாட கோஷ்டி சாத்தப்படும். பராங்குச பஞ்சவிம்சதி, நக்ஷத்ரமாலிகை, யதிராஜ விம்சதி, ஸ்தோத்ரரத்னம் இவை யநுஸந்திக்கப்பட்டு தீர்த்த ப்ரஸாத விநியோகத்துடன் (உடையவர் ஸன்னிதியில்) தலைக்கட்டியாகும். இது நித்யக்ரமம். பிறகு ஆறு மணிக்குப் பெருமாள் புறப்பாடு கண்டருளி நடையழகு காட்டிக்கொண்டே ஆஸ்தானம் சேர மூனறு மணி காலமாகும். வழி முழுதும் உபயக்காரர்களின் வழிபாடு நடைபெறும். காலைவேளைப் புறப்பாட்டிற் காட்டிலும் இப்புறப்பாடு வீறுபெறும்.

2. **இரண்டாநாள்.** பெரியாழ்வார் திருமொழி இரண்டாம் பத்தின் பத்தாந் திருமொழியாகிய * ஆற்றிலிருந்து தொடங்கி, ஐந்தாம் பத்தின் மூன்றாந்திருமொழி துக்கச்சுழலை முடிய பாசுரங்கள் (240) இன்று ஸேவிக்கப்படும். * ஆற்றிலிருந்து * * நன்னேராயிரம் * இவ்விரண்டு பாட்டுக்களுக்கு அபிநயமும் வியாக்கியான ஸேவையும்.

3. **மூன்றுநாள்.** பெரியாழ்வார் திருமொழி ஐந்தாம்பத்து நான்காந் திருமொழி * சென்னியோங்கு தொடங்கி, நாச்சியார் திருமொழியில் (12. தி.) * மற்றிருந்தீர்கட்கு * முடிய பாசுரங்கள் 164 இன்று ஸேவிப்பது. * சென்னியோங்கு * மார்கழித் திங்கள் * இவ்விரண்டு பாசுரங்களுக்கும் அபிநயமும் வியாக்கியான ஸேவையுமுண்டு. * சென்னியோங்குக்கு அபிநயமும் வியாக்கியான ஸேவையுமானதும் அத்திருமொழி

யில் மேற் பாசுரங்களையும் - அபிநயம் முன்னும் பாசுரஸேவை பின்னுமாய் ஏழாவது பாட்டு இரண்டாமடி "திருப்பொலிந்த சேவடி யென் சென்னியின் மேல் பொறித்தாய்" என்னுமளவும் அபிநயத்தோடு ஸேவித்து நிறுத்தி, பெருமாள் திருவடிகள் தம் திருமுடியில் பொறிக்கப் பெற்ற பெரியாழ்வாருடைய பாக்கியத்தை அநுகரிப்பதாய் அரையர் பெருமாளிடமிருந்து ஸ்ரீ சடகோபனைத் தமது முடியில் தரித்துவந்து ஆழ்வாராசாரியர்களனைவர்க்கும் (அரையர்) தமது திருக்கையால் ஸாதித்து கோஷ்டியாரனைவர்க்கும் (பெண்களுக்கு முட்பட) தாமே ஸாதிப்பர். இதற்கு ஒருமணி யவகாசத்திற்கு மேலாகும். இத்தகைய நிகழ்ச்சி எம்பெருமானார் திவ்யாஜ்ஞையினலன்றி மற்றெருவர் கட்டளையினல் இங்ஙனே செல்லாது! இதற்குப்பின், பெரியாழ்வார் திருமொழியைத் தலைக்கட்டி, திருப்பாவை முதற்பாட்டின் அபிநய வியாக்கியானங்களைத் தலைக்கட்டி நாச்சியார் திருமொழியில் பன்னிரண்டு திருமொழியளவும் ஸேவித்து நிறுத்தியாகும்.

4. நான்காநாள். நாச்சியார் திருமொழி (13) கண்ணனென்னுங் கருந்தெய்வம்* தொடங்கித் திருச்சந்தவிருத்தம்முடிய பாசுரங்கள் 245 இன்று ஸேவிப்பது.



ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந் நாராயணஜீயர் ஸ்வாமி நேற்று க்ரோதி வருஷத்தில் திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸன்னிதியில் நடத்திவைத்த லக்ஷார்ச்சனை மஹோத்ஸவத்தில் நடைபெற்ற மஹாகோஷ்டியின் காட்சி. இதில் திருவல்லிக்கேணி வாஸிகளான ஸ்வாமிகள் பலர் ஸேவை ஸாதிப்பதுடன், ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீ உவே. வித்வான் விஞ்சிமூர் ஆழ்வார் ஸ்வாமியும், ஆழ்வார் திருநகரி ஸ்ரீஸூக்திரத்னகர இளையவில்லி சடகோபாசார்யஸ்வாமியும் ஸேவைஸாதிப்பது விசேஷம்.

*கண்ணனென்னும் பாசுரத்திற்கும் (பெருமாள் திருமொழி) *இருளிரிய பாசுரத்திற்கும் அபிநய வியாக்கியானங்களுண்டு. *கண்ணனென்னும் பாசுரத்திற்கு அபிநய வியாக்கியானமாகி, அத்திருமொழியில் மூன்றும்பாட்டில் [*கஞ்சைக்காய்ந்தகருவில்லி* என்னும் முதலடியில்] ப்ரஸ்துதமான கம்ஸவத விருத்தாந்தத்தை நடித்துக் காட்டுவதற்காக—"அழகியமணவாளப் பெருமாள் கம்ஸவதம் செய்தருளினபடி எவ்வண்ணமே யென்ன?" என்று கேள்வியைமட்டும் மூன்றுவிசை சொல்லிவிட்டு, அத்திருமொழியில் மிச்சமுள்ள பாட்டுக்களை ஸேவியாமல் அடுத்த (*பட்டிமேய்ந்தோர் காரேறு*) திருமொழி தொடங்கப்பெற்று திருச்சந்தவிருத்தம் முடிய ஸேவித்துத் தலைக்கட்டப்படும். திருச்சந்தவிருத்தத்தில் ஒரு பாசுரத்திற்கும் அபிநய வியாக்கியான ஸேவைகள் இல்லை. இன்று பகல்மேல் இரண்டாம்ஸேவையுண்டு—கம்ஸவதத்திற்காக. கம்ஸவத விஷயமான தம்பிரான்மார்படி வியாக்கியானம் ஸேவித்து "அழகியமணவாளப்பெருமாள் கம்ஸவதம் செய்தருளினபடி இவ்வண்ணமே" என்று சொல்லி க்ருஷ்ணவதாரம் முதல் கம்ஸவதம்வரை நடித்துக்காட்டி அத்திருமொழியில் சேஷபூரணத்திற்காக "கடைக்கணென்னும் சிறைக்கோலால்" என்று தொடங்கி ஸேவித்துப் பூர்த்தி செய்யப்படும்.

## விளம்பரம்



ஸம்ஸ்கிருத பண்டிதர்களுக்கும் ஹிந்தீ பண்டிதர்களுக்கும் பரம போக்யமாக திவ்ய ப்ரபந்தங்களுக்கு இவ்விரு பாஷைகளிலும் வியாக்கியானங்கள் ஆறேழு வருஷங்களாக அச்சாகி வெளிவந்து கொண்டிருக்கின்றன. ஸம்ஸ்க்ருத வியாக்கியானம் அடியேனெழுதுவது. அதற்கு நேராக ஹிந்தி மொழிபெயர்ப்பு இங்கே ஸேவை ஸாதித்தருளும் ஸ்ரீமத் உபயவே. தி. அ. அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரிய ஸ்வாமி யெழுதி வருவது, இதுகாறும் முதலாயிரம் பூர்த்தி. பெரிய திருமொழியில் நானூறு பாசுரங்கள். இயற்பாவில் திருவெழுகூற்றிருக்கை முதல் பூர்த்தி. திருவாய்மொழியில் 600 பாசுரங்கள் பூர்த்தி. கிடைக்குமிடம் சின்ன காஞ்சீபுரம் க்ரந்தமாலா கார்யாலயம். மேலும் தொடர்ச்சியாக அச்சுநடந்து வருகிறது. இதுவரை வெளிவந்த பகுதிகளின் விலை ரூ. 48. தபால் செலவு 7 ரூ.

5. ஐந்தாந்திருநாள். திருமாலை தொடங்கி * அமலனுதிபிரான் முடிய பாசுரங்கள் 65 மட்டும் ஸேவிக்கப்பெறும். திருமாலை முதற்பாட்டுக்கு அபிநய வியாக்கியானமானதும் மேல் பாட்டுக்கள் அபிநயம் மூன்றும் பாசுரம் பின்னுமாய் ஆறும்பாட்டு மூன்றுமடி முடிய ஸேவிக்கப்படும். அதில் *அரங்கனுர்க்கு ஆட்செய்யாதே* என்னுமிடத்தில் நம்பெருமாள் திருவத்யயநோத்ஸவவைபவத்தை, புறப்பாடு திருவாராதனம், வேதவிண்ணப்பம் அருளிப்பாடு முதலிய ஸகல விவரணத்துடனும் அபிநயித்துக் காட்டி [ஒருமணி காலத்திற்குமேல் இங்ஙனே சென்றபிறகு] மேற்பாசுரங்கள் ஸேவித்து *அமலனுதிபிரான் முடித்து நிறுத்துவர்கள்.

6. ஆறும் நாளில் *கண்ணிநுண் சிறுத்தாம்பு தொடங்கிப் பெரியதிருமொழி மூன்றும்பத்து ஐந்தாந் திருமொழி முடிய பாசுரங்கள் 261 ஸேவிப்பது. கண்ணிநுண் சிறுத்தாம்பு, வாடினேன்வாடி இவ்விரண்டு பாட்டுக்களுக்கு மட்டும் அபிநயமும் வியாக்கியானஸேவையும் நடைபெறும்.

7. ஏழாம் நாள். பெரிய திருமொழி மூன்றும்பத்து ஆறுந்திருமொழி *தாவிரிய மலருழக்கி தொடங்கி ஐந்தாம்பத்து ஆறுந் திருமொழி * கைம்மான மழகளிற்றை முடிய பாசுரங்கள் 210. இன்று ஸேவிக்கப்பெறும். * தாவிரியமலருழக்கி பாட்டுக்கு அபிநயமும் வியாக்கியான ஸேவையுமாகி மேற்பாசுரங்கள் ஸேவிக்கையில் பாட்டு 5. * வாளாய கண்பனிப்பவில் * ஓ மண்ணளந்த தாளாளா! * என்னுமிடத்தில் ப்ரஸ்துதமான வாமனுவதார விருத்தாந்தத்தை நடித்துக் காட்டுவதற்காக அப்போது "ஓ மண்ணளந்த தாளாளா! ஓ மண்ணளந்த தாளாளா! ஓ மண்ணளந்த தாளாளா!" என மூன்று விசை ஸேவித்து " அழகிய மணவாளப் பெருமாள் திருவுலகளந்தருளினபடி எவ்வண்ணமேயென்ன " என்று கேள்வியை மட்டும் உத்க்ஷேபித்து நிறுத்தி, அத் திருமொழியில் மேற்பாசுரங்களை ஸேவியாமல் நிறுத்தி மேல் திருமொழி தொடங்கி ஸேவித்து முடிப்பர்கள். பிற்பகலில் இரண்டாம் ஸேவையில் வாமனுவதார விஷயமான தம்பிரான்படி வியாக்கியானம் ஸேவித்து அவ்வவதார வ்ருத்தாந்தங்களை நடித்துக் காட்டி, காலை ஸேவையில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த பாசுர சேஷத்தை ஸேவிக்கத் தொடங்கி "தண்குடந்தை நகராளா வரை யெடுத்த தோளாளா" என்றாரம்பித்து அத்திருமொழியை முடித்திடுவர்கள். அந்த ஸமயம் நாம் மண்ணுலகத்திலிருப்பதாகவே தோன்றாது.

8. எட்டாந் திருநாளில், பெரிய திருமொழி ஐந்தாம்பத்து ஏழாந்திருமொழி * பண்டை நான்மறை தொடங்கி எட்டாம் பத்து முதல் திருமொழி * சிலையிலங்கு பொன்னாழி முடிய பாசுரங்கள் 250 ஸேவித்தாகும். * பண்டை நான்மறையும் * என்கிற பாட்டுக்கு மட்டும் அபிநயமும் வியாக்கியான ஸேவையும். பாசுரத்தின் முடிவில் * அரங்கமா நகரமர்ந்தானே * என்னுமிடத்தில் அவதார வைபவங்கள் அபிநயித்துக் காட்டப்படும். பிறகு அரங்கம் என்கிற சொல் சேர்ந்துவரும் சந்தைகளனைத்தும் [ஏறக்குறைய எழுபது.] ஸேவிக்கப்படுவது பேரின்பவெள்ளம் பெருக்கும். அத்திருமொழி நாலாம் பாசுரமான * மாயிருங்குன்றமொன்று மத்தாகவில் * ஆயிரந் தோளால் அலைகடல் கடைந்தான் * என்று ப்ரஸ்துதமான அம்ருதமதன விருத்

தாந்தத்தைப் பிற்பகலில் நடித்துக் காட்டுவதற்காக அத்துடன் நிறுத்தவேண்டி "அழகிய மணவாளப் பெருமாள் அம்ருதமதனம் செய்தருளினபடி யெவ்வண்ணமே யென்ன" என்று மூவிசை சொல்லிவிட்டு மேற்பாசுரங்களை ஸேவியாமலே நிறுத்தி, மேல் திருமொழி தொடங்கி [*ஏழையேதலன் முதலாக ஸேவித்துத் தலைக்கட்டுவர்கள். பிறகு இரண்டாம் ஸேவையில் அம்ருதமதன விஷயமான தம்பிரான்படி வியாக்கியானம் ஸேவித்து, காலை நிறுத்தியிருந்த சேஷத்தை ஸேவித்து முடித்தாகும்.

9. ஒன்பதாந் திருநாளில் பெரியதிருமொழி எட்டாம்பத்து இரண்டாந் திருமொழி *தெள்ளியீர் தேவர்க்குந் தேவர் தொடங்கி பத்தாம்பத்து முதல் திருமொழி * ஒருநல்சுற்றம் முடிய பாசுரங்கள் 200 ஸேவித்தாகும். *தெள்ளியீர் பாசுரத்திற்கு மட்டும் அபிநயமும் வியாக்கியான ஸேவையும். இன்றைக்கும் இரண் டாம் ஸேவையுண்டு. அதில் முத்துக்குறி. மறுநாள் ஸேவிக்கப்போகிற திருநெடுந் தாண்டகத்தை ஆகர்ஷித்து அதில் முதற்பாட்டுக்கு அபிநய வியாக்கியானங்கள். பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் ஸேவித்து முடிந்ததும் முதற்பாட்டிலிருந்து *பட்டுடுக்கும் பாசுரம் முடிய பாட்டுக்களுக்குத் தம்பிரான்படி ஸேவிப்பர்கள். பதி னோராம்பாட்டில் கட்டுவிச்சி சொல்லுங் கூடல்குறியை முத்துக்குறியாக அபிநயித்துக் காட்டுவர்கள். முத்துக்குறிக்காக அரையர் பெருமாளிடமிருந்து தீர்த்தமும் ஸ்ரீசட கோபனும் கொணர்ந்து ஆழ்வாராசாரியர்களுக்கும் கோஷ்டியனைத்துக்கும் ஸாதிப்பர். கீழ் மூன்றுந்திருநாளில் *திருப்பொலிந்த சேவடிக்காக ஸ்ரீசடகோபன் ஸாதிப்பது மட்டும். இன்று தீர்த்தமுமுண்டு. இங்ஙனே நாளைக்குமுண்டு.

10. பத்தாந்திருநாளில் பெரியதிருமொழி பத்தாம்பத்து இரண்டாந்திருமொழி *இரக்கமின்றி தொடங்கி திருத்தாண்டகங்கள் முடிய ஸேவித்தாகும். *இரக்க மின்றிக்கு மட்டும் அபிநய வியாக்கியானங்கள். பிற்பகலில் அலங்காரம் அமுது செய்தானபின் ராவணவதத்திற்கு அருளிப்பாடு ஆகும். கொண்டாட்டங்களால் பெருமாளைக் கொண்டாடி பெரியதிருமொழியின் சாத்துப் பாசுரமும் திருநெடுந்தாண் டகத்தின் சாத்துப் பாசுரமும் (ஒவ்வொன்று) ஸேவித்து சாத்துமுறை செய்தாகும். இன்றைக்கும் அரையரால் தீர்த்த ஸ்ரீசடகோப விநியோகம் நடைபெறும்.

இன்று பெருமாள் நாச்சியார் திருக்கோலம் கொள்வது பக்தர்களுக்குப் பெரும்பேறாகும். காலை புறப்பாடு கண்டருளும்போதே நாச்சியார் திருக்கோலத்துடன் புறப்பட்டாகும். மாலையில் வெளிப்புறப்பாடாகி ஒன்பதுமணிக்கு ஆஸ்தானம் சேர்ந்தாகும். இவ்வளவோடு சிறிய திருவத்யயநோத்ஸவமென்றும் திருமொழித் திருநாளென்றும் வழங்கப்படுகிற பகற்பத்து நிகழ்ச்சி ஒருவாறு தெரிவித்ததாயிற்று. இது மிகவும் ஸம்க்ஷேபமாகத் தெரிவித்தபடி. நேரிலநுபவிப்பார்க்கு இமையவர் நேரொவ்வார்தாமே. இனி திருவாய்மொழித் திருநாளென்கிற இராப்பத்தின் வைபவமிருக்கும்படி கேண்மின். .... .... .... .... *

# திருவாய்மொழித் திருநாள் நிகழ்ச்சி

1. வைகுண்ட ஏகாதசி நன்னாள். மார்கழித் திங்களில் இதுவன்றோ மதிநிறைந்த நன்னாள். நம்மை வைகுண்டத்திலிருப்பதாக நினைக்கச் செய்யும் ஏகாதசி-வைகுண்ட ஏகாதசி என்று கொள்க. இன்று விடியற்காலம் நாலு மணிக்கு நத்துங்கியுடன் புறப்பாடு. திருவாசல் திறப்பது ஆறுமணிக்கு. அங்கிருந்து சார்த்தூலகதியில் அதிவேகமாகத் திருமாமணி மண்டபத்திற்கு முன் கொட்டகையில் ஆழ்வாரைக் காண வேணுமென்னும் அபிநிவேசத்துடன் எழுந்தருள்வதானது எவர்க்குமே கண்ணுள் நின்றகலாததோர் காட்சியாகும். ஸ்ரீ பராங்குச பரகால யதிவரர் மூவரும் எதிர்த் திருமண்டபத்தில் கீழ்கோபுர வாசலுக்கு நேராக எழுந்தருளி நிற்க, மரியாதையாகி அரையர் * உயர்வற வுயர்நலம் தொடங்குவது. ஆழ்வாரைத் திருமுன்பே அழைத்துக்கொள்ளுவதும், அந்த ஹர்ஷப்ரகர்ஷத்துக்கு ப்ரகாசகமாக ஒய்யார நடையிட்டுக் கொட்டகையில் பத்தி யுலாவுவதும் படியேத்தம் திருவந்திக் காப்புடன் திருமாமணி மண்டபம் சேர்ந்து மிகவுத்துங்கமான திவ்பாஸ்தான மண்டபத்திலே எதிரே ஆழ்வாராசாரியர்களின் திரளை * இருந்தான் கண்டுகொண்டு * என்னுமருளிச் செயலை நினைப்பூட்டுமாறு மாலை ஆறுமணிவரை ஸேவார்த்திகளுக்குப் படிவிடுவதும்,



நம்மாழ்வார் (ஆழ்வார்திருநகரி திருக்கோலம்)

உபயவிபூதியிலும் இவ்வளவுதான் ஜீவராசிகளென்று நிர்ணயிக்கலாம்படி * துன்னிட்டுப் புகலரியதாய், எந்த ப்ராகார வீதியும் ஜனஸங்க ஸங்கட்டிதமாய்த் திகழும் பெரிய திருநாள் இதுவன்றோ. மாலை 6 மணிக்கு அரையர் எழுந்தருளி * உயர்வற வியாக்கியானம் அபிநயத்துடன் ஸேவிப்பர். ஈடு முப்பத்தாறாயிரம் மூன்றும் ச்ரிய:பதி ஸேவித்து முதற்பாட்டுக்கும் ஈடு ஸேவிப்பர். முதற் பத்து பூர்த்தியாகும். திருப்பரவாடை முதலானவையாகி வீணை வாத்தியத்துடன் புறப்பட்டருளி ஆஸ்தானம் சேர்வது பன்னிரண்டு மணியாகும். புறப்பாட்டுக்கு முன் திருமண்டபத்தில் ரத்னங்கி படிகளையப்பெறும். பெரிய பெருமாள் முத்தங்கி ஸேவை ப்ரபாதத்திலிருந்தே தொடங்கியாகும்.

2. இரண்டாந் திருநாள். பகல் 11·30க்கு பட்டர் திருவம்சஸ்தர்களில் முறைகாரர் குடை திருச்சின்னங்களுடன் ஆர்யபடாள் வாசலளவும் எழுந்தருளி உள்ளே சென்றபின் திருக்காப்பு சேர்த்து உள் திருவாசலும் திருக்காப்பு சேர்த்துப் பன்னிரண்டு மணிக்குப் புறப்பட்டருளி உத்தம நம்பிகள் பிள்ளைப் பெருமாளையங்கார் பாடலென்று (அஷ்டப் பிரபந்தத்திலில்லாத) பல பாட்டுகளைத் திருமுன்பே பாடிக்கொண்டு கண்ணாடி முன் நம்பிள்ளை திருவோலக்கமென்னு மிடத்திலே ஒய்யார நடையுடன் திருவாசல் முன்பு அருளிப் பாடாகித் திருக்காப்பு நீக்கி த்வஜஸ்தம்ப மண்டபம் சேர்ந்து ஒய்யார நடையுடன் தொரை ப்ரதக்ஷிணத்தில் பரமபத வாசவிருக்கும் பக்கம் நாலுகால் மண்டபத்தில் வேத விண்ணப்பமாகி தீர்த்தம் விடாய் புருப்பு கோஷ்டியாகி பரமபத வாசல் திறந்து வெளியே எழுந்தருள்வது. வரிசையாய் உபயங்கள் கண்டருளிக்கொண்டே யெழுந்தருள்வது. முன்னம் புறப்பாடான வுடனேயே எம்பெருமானார் தமது ஸந்நிதியிலிருந்து ஆழ்வார் ஸந்நிதிக் கெழுந்தருளி ஆழ்வார்களுடன் தவுட்டரை வாசலுக்கு நேராக மணல் வெளியில் ஸ்ரீராமன் ஸந்நிதிக்கு எதிர்ப்புறத்தில் பந்தலில் மூவரும் (பராங்குச பரகால யதிவரர்கள்) எழுந்தருளியிருக்க, ஸ்ரீ ரங்கராஜஸ்தவம் ஸேவிப்பதும், பெருமாள் எழுந்தருளும்போது ஆழ்வார் எதிர்நோக்கி விரைந்தெழுந்தருள்வதும், பெருமாள் ஒய்யார நடையுடன் ஆழ்வார் * வாரிக்கொண்டுன்னை விழுங்குவன் * என்றதும், பெருமாள் * தானென்னை முற்றப்பருகினான் * என்னும்படி யிருந்ததும் ப்ரத்யபிஜ்ஞை கொள்ளலாம்படியே யிருக்கும். பிறகு ஸ்ரீரங்கராஜஸ்தவ சாத்துமுறை— * குணதுங்கதயா தவ ரங்கபதே * * த்வம் மீநபாநீயநயேந * இரண்டு ச்லோகங்களையும் சாற்றி * ஸ்ரீ பராசரபட்டார்ய:* தனியனும் ஸேவித்தானபிறகு பெருமாள் கனவேகமாகத் திரும்புவது *பகவதஸ் த்வராயை நம:* என்ற பட்டர் ஸ்ரீ ஸூக்தியை நினைப்பூட்டும். நாடோறும் இதுவே க்ரமம். பிறகு ஆழ்வார்கள் மரியாதை. அந்தந்த நாளில் திருவாய்மொழியில் எந்த பத்து ஸேவிக்க ப்ராப்தமோ, அதில் முதற் பாட்டு ஆழ்வார் திருமுன்பே அரையர் தொடங்கி ஆழ்வாரைப் பெருமாள் பக்கலிலே எழுந்தருளப் பண்ணுவதும் படியேத்தமும் திருவந்திக்காப்பும் திருமாமணி மண்டபம் ஆஸ்தானம் சேர்வதும் நித்யக்ரமம்.

7. ஏழாந்திருநாளன்று ஆழ்வார்க்கு நாச்சியார் திருக்கோலம். [*கங்குலும் பகலும் பதிகத்தில் ஆழ்வார் நாயகீஸமாதியிலிருந்ததுபற்றி.] அந்தத் திருக்கோலத்துடன் கொட்டகையில். அன்று ஆழ்வானருளிச்செய்த ஸ்ரீஸ்தவமும் பட்டரருளிச்

செய்த ஸ்ரீகுணரத்னகோசமும் ஸேவிப்பது விசேஷம். ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகம் சாத்தாகும். பெருமாள் எழுந்தருளி (நாச்சியாரான) ஆழ்வாரைக் கண்டு மோஹித்து, கொட்டகை யுத்ஸவம் எல்லாம் ஆனபின்பு ஆஸ்தானத்துக்கு எழுந்தருள்வதற்குமுன்பு கைத்தல ஸேவை. ஆழ்வார், எதிரே தோளில் ஏள்ளியிருப்பர். அரையர் (ஏழாம்பத்து, முதல் திருவாய்மொழி) *உண்ணிலாவிய் பத்துப் பாட்டும் ஸேவித்தபின்பு கைத்தலஸேவை. அப்போது *கங்குலும் பகலும் ஸேவிக்கையில் *இவள்திறத்தென் செய்கின்றாயே?* என்று கேட்பது உயிரை யுருக்கியுண்ணு மென்னும்படியிருக்கும். "கோயில் திருவாசலிலே முறைகெட்ட கேள்வியாக்கி" என்ற ஆசார்யஹ்ருதய ஸ்ரீஸூக்தியை ரஸிகர்கள் நினைத்து உருகுவர்கள். பின்பு ராத்ரி *கங்குலும் பகலும் அபிநயம் வியாக்கியானம். *அந்திப்போதவுணனுடலிடந்தானே" என்கிறவளவிலே ஹிரண்யவதம் வியாக்கியானம் அபிநயம். பின்பு அரையர் திருக்கையால் தீர்த்தம் ஸ்ரீசடகோபன் ஸாதித்தல். பின்பு (விட்டவிடம் தொடங்கி) *அலைகடல் கடைந்தவாரமுதே தொடங்கி ஏழாம்பத்தை ஸேவித்து முடிப்பது. திருப்பாவாடை வெள்ளிச்சம்பா கோஷ்டி, புறப்பாடு. ஏகாந்தஸேவை இவை யதாக்ரமம்.

8. எட்டாந் திருநாள் ஜயவிஜயர்களுக்கு முன்பாக குதிரை நம்பிரான்மேல் வீற்றிருக்கும் நிலை கண்ணுள் நின்றகலாத தொன்று. வேதவிண்ணப்பம். அங்கே தீர்த்த கோஷ்டி. திருவாசல் திறப்பதில்லையின்று. மணல் வெளியில் திருவேடுபறி. * வாடினேன் வாடி தொடங்கித் திருமங்கை யாழ்வாருடன் திருமாமணி மண்டபம் சேர்தல். இரவு பத்து மணிக்கு * நெடுமாற் கடிமை அபிநய வியாக்கியானம்.

10. பத்தாந் திருநாள் மாலை மூன்று மணிக்குப் புறப்பாடு. திருவாசல்திறந்து சந்திர புஷ்கரிணியில் தீர்த்தவாரி (ஸ்ரீ சடகோபனுக்கு). அதற்குமுன் காலையிலேயே ஆழ்வார்க்கு அலங்காரத் திருமஞ்சனம். திருத்துழாய் வளையம் திருமாலை பன்னிரு திருமண்காப்புடன் திருவடி தொழ ஸித்தமாக * ஏஹி பச்ய சரீராணியென்று விரஹம் தின்ற வுடம்பைக் காட்டுகிறேனென்னும்படி திகழ்வதானது * மரங்களு மிரங்கும் வகையிலே உருக்கி யுண்டிடும். அக்கோலத்துடன் ஸ்ரீ ரங்கராஜஸ்தவ ஸேவை. குணதுங்கதயா சாத்துமுறையாகி திருமாமணி மண்டபம் ஆஸ்தானம். ராத்திரி பெருமாளுக்கு அசீதி கலசத் திருமஞ்சனம். பின்பு அலங்காரம் திருப்பணியாரம் பன்னீராயிரம் அமுது செய்து; அரையர் ஏள்ளி * தாளதாமரை வியாக்கியானம் பத்தாம் பத்து ஸேவை * சூழ்விசும்பணி முகில்வரைக்கும். திருவடிதொழ எழுந்தருளும் போது * சூழ்விசும்பும், திருவடி தொழும்போது * முனியே நான்முகனும் அரையர் ஸேவிப்பது. * முனியே நான்முகன் ஒவ்வொரு பாட்டையும் இரு முறை ஸேவிப்பது. அது தலைக்கட்டுமளவும் ஆழ்வார் பெருமாள் திருவடியிலே வேரற்ற மரம் போலே கிடப்பதும் திருத்துழாய் பணிமாறித் திருமேனியை மறைப்பதுமான வைகரி மரங்கள்போல் வலிய நெஞ்சினரையும் இரும்புபோல் வலிய நெஞ்சினரையும் இறையிறை யுருகச் செய்யும்.

பகற்பத்திற் போல இராப் பத்திலும் ஆழ்வார்கள் திரும்பி யெழுந்தருளுகையில் ஸ்தோத்ரபாட கோஷ்டியும் நம்மாழ்வார் ஸன்னிதி வாசலில் பஹுமானமும் எம்பெருமானார் ஸன்னிதியில் சாத்துமுறை கோஷ்டியும் குறையற நடைபெறும்,

இந்த க்ரமங்களை ஆதிகாலத்தில் ஏற்பாடுபண்ணி யருளின ஆசாரியர்களின் திருவுள்ள வைசால்யத்தையும், இன்ன இன்னபடி அமைக்க வேணுமென்ற தோற்றங்களையும் நெஞ்சால் நினைக்கவும் அதிகாரிகளில்லை. திருமழிசைப்பிரான் * என் மதிக்கு விண்ணெல்லாமுண்டோ விலை * என்று பேசிக் கொண்டார். அந்த திவ்ய ஸ்ரீ ஸூக்திகள் இங்ஙனே நறுமணங் கமழும்படி செய்துவைத்த மஹாசாரியர்களின் மதிக்கு மண்ணும் விண்ணுமெல்லாம் [உபய விபூதியும்] விலை போராதே.

பத்தாநாள் திருவடி தொழுதஉத்ஸவம் தலைக்கட்டிப் பெருமாள் மூலஸ்தானம் சேர்வது மறுநாள் பிற்பகலிலாகும். அமுதனார் திருவம்சஸ்தர்களின் மிராசான இயற்பா ஸேவை அன்றிரவுதான் ஆஸ்தானத்திலே நடைபெற்று மறுநாள் தீர்த்த விநியோக கோஷ்டியாகும். அன்றுதொடங்கியே ஸ்ரீரங்கநாச்சியார் ஸன்னிதியில் ஐந்துநாள் பகற்பத்தும் ஐந்துநாள் இராப்பத்தும் நடைபெறும். அதில் தொடக்கமெல்லாம் அரையர்களுடையது. ஸேவிப்பது அத்யாபகர்களுடையது. ... *

* ஸ்ரீமந்! ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய. *



காட்டுமன்னார் ஸன்னிதியில் நாதமுனிகள் மஹோத்ஸவத்தில் உபந்யாஸ கோஷ்டி.

**கோயில் அரையர் ஸேவை யடைவு முற்றிற்று.**